ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீராமாநுஜர்

ஸ்ரீ சதுர்வேதி ஸ்வாமிகளின்
சொற்பொழிவுகளிலிருந்து தொகுத்தவர்
ஸ்ரீ வே. லக்ஷ்மி நரஸிம்ஹன்

இந்த நூலை விருப்பமுள்ளவர்கள் அனைவரும்
தங்கள் பெயரில் இயன்ற பிரதிகள் அச்சிட்டு
விலையில்லாமல் ஆர்வலர்க்கு வழங்க வேண்டுகிறோம்

**ஸ்ரீபாஷ்யகார அறக்கட்டளை**
40, பக்தவத்ஸலம் ரோடு,
மயிலாப்பூர், சென்னை - 600 004
தொலைபேசி எண் : 044-2499 0986
மின் அஞ்சல்: bhashyakarasri@gmail.com
இணைய தளம் : www.sriramanujamissiontrust.info

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**ஸ்ரீபாஷ்யகார அறக்கட்டளை** (பதிவு எண்: 681/2000)

16 ஆண்டுகள் ஸ்ரீவைஷ்ணவ ஸேவையில்........என்றும்

- திவ்ய தேசங்கள் மற்றும் புராதன திருக்கோவில்களுக்கும் கிராமக் கோவில்களுக்கும் கட்டுமான, சீரமைப்பு மற்றும் விரிவாக்கப் பணிகளுக்கு பொருளுதவி.
- மடங்கள், திருமாளிகைகள், மற்றும் ராமாநுஜ கூடங்களை சீரமைக்கவும் சிறப்புற நடத்தவும் ஒருங்கிணைப்பு மற்றும் பொருளுதவி.
- ஸ்ரீவைஷ்ணவ மாநாடுகள், பத்திரிக்கைகள், ததீயாராதனங்களை நடத்துபவர்களுக்கு உதவி மற்றும் ஊக்கத்தொகை.
- அரிதான மற்றும், மறுபதிப்பு செய்யப்படாத ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய, கலை இலக்கிய மற்றும் ஆய்வு நூல்களைப் பதிப்பித்தல்.
- கிராமங்களிலும், நகரங்களிலும் ஸ்ரீவைஷ்ணவ ப்ரச்சாரம் செய்பவர்களுக்கு உதவி மற்றும் ஊக்கத்தொகை.
- தேவையுள்ள அர்ச்சகர்கள், புரோகிதர்கள் மற்றும் அடியார்களுக்கு ஊதியம், ஓய்வூதியம், ஊக்கத்தொகை மற்றும் திருமணம், கல்வி, மருத்துவ உதவிகள்.
- ஸம்ப்ரதாயப்பயிற்சி வகுப்புகள் மற்றும் விழிப்புணர்வு முகாம்களை நடத்துதல்.
- திவ்ய தேசங்களில் மரபுகளைப் பாதுகாக்கவும், செயல்படுத்தவும், சட்ட உதவி மற்றும் ஒருங்கிணைப்பு.

**பெருந்திட்டங்கள்:**

- உலகளாவிய ஸ்ரீவைஷ்ணவ ஒருங்கிணைப்பு மையம்.
- வைஷ்ணவக்கூட்டமைப்பு (சங்கர, மாத்வ, வல்லப, நிம்பார்க, சைதன்ய, ராமானந்த, ஸ்வாமிநாராயண, சங்கரதேவ ஸம்ப்ரதாயங்களை உள்ளடக்கியது).
- ஸ்ரீவைஷ்ணவ பல்கலைக்கழகம்.
- ஸ்ரீவைஷ்ணவ மக்கள் தொண்டு மையம்.
- ஸ்ரீவைஷ்ணவ தொலைக்காட்சி.
- ஸ்ரீபெரும்புதூரில் ஸ்ரீராமாநுஜரின் ஆயிரமாவது ஆண்டு ஆலயம் மற்றும் மணிமண்டபம் அமைத்தல் மற்றும் ஆயிரமாவது ஆண்டை ஒட்டி பல சமுதாய, வைஷ்ணவ வளர்ச்சிப்பணிகள்.

மற்றும் பல...

அனுகியருளவேண்டிநிற்கும் கைங்கர்யார்த்திகள்

**ஸ்ரீபாஷ்யகார அறக்கட்டளை**



# ஜகதாசார்யர் ராமாநுஜர்

## குரு மற்றும் ஆசார்யர்

**அன்பர்களே!** பொதுவாகப்பார்த்தால் நமக்கு ஆசைகள் மூன்று; கஷ்டங்களே வரக்கூடாது என்பது முதல் ஆசை. வந்தாலும் விரைவில் மீண்டு வந்து சௌக்கியமாக வாழவேண்டும் என்பது இரண்டாவது. 'கஷ்டம்-சௌக்கியம்' இந்த இரண்டுக்கும் நடுவில் சிக்கித்தவிக்கவைக்கும் பிறவியே நமக்கு வேண்டாம் என்பது மூன்றாவது. இவற்றில் மூன்றாவது ஆசை இருத்தல் அரிது. மற்ற இரண்டு ஆசைகளும் இல்லாத மனிதர்களே இல்லை எனலாம். ஆசைகள் நிறைய இருந்தாலும் ஆற்றலும் தகுதியும் இல்லாத நமக்கு வலிமை தந்து இறங்கி உதவி நம்மைக் கரைசேர்ப்பவன் எம்பெருமான் தான்!

சரி! அவருக்கே எல்லாம் தெரியும்! அவரால் எல்லாம் முடியும்! மேலும், நம்மைப் படைத்துக்காத்து வருபவன் என்பதால் நம்மைக்கரையேற்றும் பொறுப்பும் அவனுடையதே. இதுபோக, அவனே நமக்குத்தாய், தந்தை, சுற்றம், நண்பன் என எல்லாவகை உறவு என்றும் வேதங்கள், பெரியவர்கள் சொல்லக்கேட்கிறோம். எனவே அறிவு, ஆற்றல், பொறுப்பு, உறவு என அத்தனையும் உள்ள அவர்தானே முயன்று நேரடியாக வந்து நமக்கு நன்மை செய்ய வேண்டும்? அவருக்கும் நமக்கும் இடையில் 'குரு' என்று ஒருவர் எதற்கு? என்ற சந்தேகம் நியாயமே.

இதற்குச்சான்றோர்கள் கூறும் பதில்:

- காணாமல்போன பிள்ளைகளையும் பெற்றோரோடு உறவுகெட்டுப்போன பிள்ளைகளையும் பெரியவர்கள் மீண்டும் அவர்களது பெற்றோர்களிடம் சேர்ப்பது போல, அறியாமையிலும், தவறான வழிகளிலும் சிக்கித்தவித்து, எம்பெருமானை விட்டுப்பிரிந்தவர்களை மீண்டும் அவனிடம் சேர்ப்பவர் 'குருவே'!
- நாம் அனைவரும் கோவில், வழிபாடு, வேண்டுதல் என எம்பெருமானோடு தொடர்பு உடையவர்களாய் இருந்தாலும், அந்த வெறும் தொடர்பை, நட்பாக நல்லுறவாக, நெருக்கமாக மாற்றித்தரும் வல்லமை 'குருவுக்கே' உண்டு. நாமே எம்பெருமானிடம் வைத்துக்கொள்ளும் தொடர்புக்கும், நல்ல ஒரு குருவின்மூலம் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்புக்கும் நிறைய வேறுபாடு உண்டு. நாம் 'எம்பெருமானை' சந்நிதிகளில் சேவிக்கும்பொழுது என்ன ஒரு

பரவசமும் நிறைவும் அடைவோமோ, அதைவிட கூடுதல் பரவசமும் நிறைவும், நல்ல குருவினால் உருவாக்கப்பட்ட ஒரு 'அடியாரை'க் காணும்போது எம்பெருமானுக்கு ஏற்படுகிறது.

- எம்பெருமானே எல்லோரையும் படைத்தான் என்று நாம் வேதங்களின் வாயிலாக அறிகிறோம்; உறுதியாக நம்புகிறோம். ஆனால், கண்கூடாக அனைவரும் அவரவர் தாய் தந்தையரிடமிருந்தே தோன்றுவதைக் காண்கிறோம். என்றாலும், நம் தாய்தந்தையரைக்கொண்டு நம்மைப்பிறப்பிப்பவன் அவனே என்று தெளிகிறோம். அதுபோலவே, நல்வாழ்க்கையும், நல்லறிவும், முக்தியும் எம்பெருமானே அளிப்பான் என்றாலும் அதை ஓர் குருவின் வாயிலாகவே வழங்குகிறான் என்பதில் எந்த முரண்பாடும் இல்லை.
- ஒரு குருவை வைத்துக் கொள்ள வேண்டும் என்பது நம் விருப்பத்தாலோ ஏதோ ஒரு சூழ்நிலையிலோ உண்டான மரபு அல்ல. வேதங்கள், ஒரு குருவைக்கொண்டே பரம்பொருளை அறிய வேண்டும்; அடைய வேண்டும் என்று கூறுகின்றன. ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவும் பகவத்கீதையில் குருவின் அடிபணிந்து, அறிவையும் நல்வழியையும் பெறவேண்டும் என்கிறார். ஸர்வேஸ்வரனே இப்படிக்கூறுவதிலிருந்து குருவின் பெருமையும் ஆற்றலும் எத்தகையன என நாம் தெரிந்து கொள்ளலாம்.
- எம்பெருமானைத்தவிர நம்மைக்காக்கவும், உயர்த்தவும், விடுவிக்கவும் எவராலும் முடியாது என்று சொன்ன அதே வேதங்களும் மகான்களும், குருவருளால் அனைத்தும் கைகூடும் என்று முழங்குவதிலிருந்தே குருவும் எம்பெருமானின் ஒரு வடிவமே என்பதைத்தெளிவாக உணரலாம். பத்து அவதாரங்கள் எடுத்து வேதம், வேள்வி, தேவர்கள், பூமி, அடியார்கள், தருமம் என அனைத்தையும் காத்த எம்பெருமான், தான் காத்துவைத்தது அனைத்தும் அழியாமல் காக்க 'குரு' என்கிற அவதாரம் எடுத்தான் என்பது பெரியோர் கூற்று.

நாம் பெறும் செல்வம், உடல்நலம், நீண்டஆயுள், பதவி, புகழ், மக்கட்செல்வம் போன்ற மற்றவையெல்லாம் வெறும் 'பாக்கியம்' (பேறு) தான். இந்த அனைத்து நலன்களையும் தரக்கூடிய ஒரு வழிகாட்டி அமைவதையே 'சௌபாக்கியம்' (பெரும்பேறு) என்று சொல்கிறோம். ஆன்மிக வாழ்க்கையில் கைகொடுத்து உதவும் குருவின் அருள் கொண்டே நம் தனிப்பட்ட வாழ்க்கை மற்றும் பொதுவாழ்க்கைகளை வெற்றிகரமாக அமைத்துக்கொள்ளமுடியும். வேறு நன்மைகளைத் தருவதைக்காட்டிலும் 'ஒரு குருவை' நமக்கு அருள்வதே எம்பெருமான் தருகின்ற மிகப்பெரிய வரமாக இருக்கமுடியும்!

**சரி! இந்த குருவைப்பெறுவதற்கு என்ன செய்யவேண்டும்?**

'தவத்தளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்' என்பார்கள். நல்ல மனைவி, நன்மக்கள், நல்ல நண்பர்கள் என எல்லா உறவுகளும் நம் புண்ணியத்தால் வாய்ப்பவை என்பார்கள். எனவே, 'நல்ல குரு அமைவதும் நாம் செய்த மிகப்பெரும் புண்ணியத்தால்தான்' என்பது ஒரு பொதுவான கருத்து.

இந்த ஆன்மா கடைத்தேறவேண்டும் என்று எம்பெருமான் ஒரு நொடிப்பொழுது நம்மைக் குறித்து நினைத்துவிட்டால் போதும்! உடனே நமக்கு உரிய குரு கிடைத்துவிடுவார்.

**எதையெதையோ தேடி அலைகின்ற மனிதர் கூட்டத்தில் குருவைத்தேடி அலைபவர்கள் எத்தனை பேர்?**

எவன் ஒருவனுக்கு வாழ்க்கையில் நாம் உண்மைப்பொருளைத் தெரிந்து கொள்ளவேண்டும்; ஆன்ம மேன்மையை அடையவேண்டும், எல்லோருக்கும் நன்மை செய்யவேண்டும் என்னும் வேகமும், தாகமும் இருக்கின்றனவோ, அவனைத் தேடி கட்டாயம் நல்லதோர் குரு வருவார். அல்லது அவன் சரியான குருவைத்தேடியோ தேடாமலோ விரைவில் அடைவான். அமிலத்தில் (நைட்ரிக்) தங்கத்தைத்தவிர பிறபொருள்கள் கரைந்துபோகும். அதுபோன்றே, இத்தகைய வேகமும், தாகமும் உடையவன் எதிரில் ஒரு சரியான வழிகாட்டியைத் (குரு)தவிர, வேறு யாராலும் ஈடுகொடுத்து நிற்கமுடியாது. நம்மிடம் குடிகொண்டிருக்கும் உறுதியின்மை மற்றும் உண்மையின்மைதான், சரியில்லாத இடங்களில் நம்மைக்கொண்டு சேர்க்கின்றன.

**இந்தத் தேடலில் குரு எப்பொழுது கிடைப்பார்?**

ஆர்வம் குறையாது குருவைத்தேடிக்கொண்டேயிருந்தால் உறுதியாகக்கிடைப்பார். நல்ல சிந்தனைகள், நல்லோர் நட்பு, நற்செயல்கள் என, பொருளோடு பொழுதைக்கழிப்பவர்களுக்கு அவர்களது தேடல் விரைவில் பயன்தரும்.

எடுத்த எடுப்பிலேயே நாம் நமக்குரிய குருவை அடையாது போகலாம். குருவைத்தேடும் முயற்சியில் பலருக்கு நேர்மையான அறிவாளிகளின் நட்பு முதலில் உண்டாகிறது. அவர்கள் தங்களையே குரு என்று திசைதிருப்பாமல், நம் ஆர்வத்தையும் தெளிவையும் பெருக்குவதோடு, சரியான குருவிடமும் நம்மைச் சேர்ப்பார்கள்.

ஏணியில் ஏறி மாடியை அடைவதுபோல், பல பெரியோர்களைப்பற்றி இறுதியாக குருவை அடைபவரும் உண்டு. முதல் நிலையில், எதிலாவது ஒரு பிடிப்பை ஏற்படுத்தும் குரு கிடைப்பார். அடுத்த நிலையில் அமையும் குரு, நமக்கு ஆழ்ந்த நம்பிக்கையைத் தோற்றுவிப்பார். இதற்கும் அடுத்த நிலையில் இருக்கும் குரு, ஒரு அடிப்படை ஒழுக்க நெறியில் நம்மை நடத்திச் செல்வார். இந்த அடிப்படை ஒழுக்க நெறியானது அன்பு, ஈகை, நேர்மை, கடமையுணர்வு, தாய்தந்தை, பெரியோர்களை மதித்தல், இயற்கையைப்போற்றுதல் போன்ற வாழ்வியல் அடிப்படைகளிலும் தெய்வம், தர்மம், வேதம், பண்பாடு, பசுநலம் போன்ற ஆன்மிக நெறிகளையும் உள்ளடக்கியது. இவற்றுக்குப் பின்னர் நம்மைப் பொறுப்பேற்றுக் கரையேற்றும் குரு வருவார். இந்த படிப்படியான முன்னேற்றங்கள் அனைத்தையும் ஒரே ஒருவரோ, ஒரு சிலரோ அல்லது பலரோ நமக்கு வழங்கலாம்!

நம்மைக் கரையேற்றுபவர் 'பரமாசார்யன்' என்று அழைக்கப்படுவார். அவரோடு நம்மை இணைப்பவர் 'ஆசார்யன்' ஆவார். இந்த இருவரின் பெருமைகளையும் வாழும் முறைகளையும் கூறி, வாழ்ந்துகாட்டி, நம்மை நெறிப்படுத்தி வருபவர்கள் 'ஸதாசார்யர்கள்'.

பலர் அன்றாடம் பாடுபட்டுப் பொருளீட்டி வாழும்பொழுது, யாரோ ஒரு சிலருக்கு எதிர்பாராத பெரும்பரிசுகள் (லாட்டரி) கிடைப்பதைப்பார்க்கிறோம். அதுபோன்றே ஒரு சிலருக்கு நேரடியாக உயர்ந்த குருவின் உறவு பாடுபடாமலேயே கிடைத்து விடுகிறது. வைணவ மரபில் பிறந்தவர்களுக்கும், வைணவ உறவில் வளர்பவர்களுக்கும் **'ஸ்ரீராமாநுஜர்'** ஒரு அருட்புதையல்; பெரும்பரிசு!

குரு என்பவரைப் புதிதாகத்தான் தேடிக்கண்டுபிடித்து அடையவேண்டும் என்பதில்லை. நாம் கண்டோ, கேட்டோ வழிபட்டுக்கொண்டிருக்கும் ஒருவரே கூட, தலைசிறந்த குருவாயிருக்கலாம். ஆயினும், அவருடைய முழுமையான பெருமைகள் மற்றும் 'குரு'வாயிருக்கும் மேன்மையை உணராமல், ஒரு அடிப்படை மதிப்பு மற்றும் ஈடுபாட்டோடு மட்டும் அவரை வணங்கிக் கொண்டிருக்கலாம். இது போன்றவர்களுக்குத் தெளிவும் முதிர்ச்சியும் உண்டாகும்பொழுதுதான், 'தான் தேடிவந்த பொருள் தன்கையிலேயே' இருப்பதை உணர்வார்கள். போற்றத்தகுந்த மகானாகவும் அருள்தரும் பெரியாராகவும் பலராலும் கொண்டாடப்படும் ஸ்ரீபெரும்பூதுாரிலே அவதரித்த 'ஸ்ரீராமாநுஜர்' உலகம் உய்யவந்த தன்னிகரற்ற 'குரு' ஆவார் என்ற உண்மையை விவரிப்பதே நம் நோக்கம்!

## ஆசார்யனின் தனிப்பெருமை

குரு மற்றும் ஆசார்யன் என்னும் சொற்கள் வழக்கில், ஒரே மாதிரியாகக் கையாளப்பட்டுவந்தாலும், 'ஆசார்யன்' என்னும் சொல்லுக்கு சில தனிச்சிறப்புகள் உண்டு. பொதுவாக, நமக்குத் தொழில், படிப்பு மற்றும் கலைகளைக் கற்றுத்தருபவரை குரு, ஆசான், ஆசார்யன் என்று கூறுவது வழக்கில் உண்டு. குருவினுடைய பல ஆற்றல்களில் ஒன்றான 'கற்பித்தல்' என்பதை அவர்கள் செய்வதால் அப்படி அழைக்கப்படுவதில் ஓரளவு பொருத்தம் உள்ளது. இருப்பினும், ஆசார்யன் என்பவர் வெறும் அறிவாளியோ, கற்பிப்பவரோ மட்டுமல்லர். சகல சாஸ்திரங்களின் ஞானத்தையும் கொண்டவர்; பரம்பொருளை மெய்யாகத் தெரிந்து கொண்டவர்; அதனை உணர்ந்து அந்நெறியைக் கடைப்பிடிப்பவர்; நம்மையும் திருத்தி அந்நெறியைக் கடைப்பிடிக்கவைக்கும் ஆற்றல் பெற்றவர்.

- உண்மையான ஆசார்யனானவர், ஒரு தாய் தன் குழந்தையைத் தன் வயிற்றினில் பத்து மாதங்கள் சுமந்து பாதுகாத்துப் பெற்றெடுத்து வளர்ப்பது போன்று, தன்னை அண்டியவனை அவன் பிறவி கடைத்தேறும் வரை, தன் உள்ளத்தில் சுமந்து வளர்ப்பவர்.
- தாய், தன் குருதியை பாலாகத் தன் குழந்தைக்குப் புகட்டுவது போன்று, ஆசார்யன், தன்னுடைய கடும்பயிற்சிகளான வேதக்கல்வி, வேள்வி, தவம், புலனடக்கம் போன்றவற்றின் அரும்பயனை, எளிமையும், இனிமையும் நிறைந்த உபதேசங்களாக மாற்றி, அன்புடன் நமக்குப்புகட்டி வளர்ப்பார்.
- தாய், பால் குடிக்கும் தன் குழந்தை நோயுற்றால், அதற்கு மருந்தை உட்கொண்டு தாங்கும் தன்மை இல்லையென்பதால், தான் மருந்தினை உட்கொண்டு, அம்மருந்தின் ஆற்றலைத் தன் பாலின் வாயிலாகக் குழந்தைக்குப் புகட்டி நோய் நீக்குவாள். அதுபோன்றே, ஆசார்யன், நாம் செய்யவேண்டிய ஆனால் செய்யாமல் விட்டவற்றை நமக்காகச் செய்பவராகவும், செய்யத்தகாதன செய்து துயருற்றால், அதற்குத்தாமே கழுவாய் செய்து நம்மை விடுவிப்பவராகவும் உள்ளார்.
- உலகினர் அனைவரும் நன்மையின் பங்கைத்தாமே பெற்று மகிழவும் தீயதை பிறர் தலையில் கட்டிவிடவுமே விரும்புவர். ஆனால் ஆசார்யர் அவர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர். தன்னிடம் உள்ள நன்மைகளையெல்லாம் நமக்குப்பகிர்ந்தளித்து, நம்

தீமைகளையெல்லாம் தான் ஏற்றுக்கொண்டு நம்மை உய்விக்கும் உயர்ந்த உள்ளங்களையே 'ஆசார்யன்' என்று போற்றுகின்றோம்.

- வெறும் கருணையோ, வெறும் ஆற்றலோ பயனற்றவை. இரண்டும் சேர்ந்த ஒரு இறைவடிவமே ஆசார்யன். எம்பெருமான் அருளைக்கொண்டே நம்மைக் காப்பவராயினும், அவருடைய அக்கறை, பொறுமை, இரக்கம், மன்னிக்கும்தன்மை, எளிமை, போன்றவை எம்பெருமானிடமிருப்பதைக் காட்டிலும் கூடுதலாகவேயிருக்கும். உலக மேலாண்மையைச் செய்துவருவதால் தன்னால் சூழ்நிலைக்காட்பட்டு வெளிப்படுத்தமுடியாத சில பண்புகளையும் அளவுகளையும் கூட, எம்பெருமான், 'உயிர்கள் உய்வா'கிற ஒரே தொழிலைச்செய்துவரும் ஆசார்யர்களுக்கு வழங்கி அவர்களின் வாயிலாக உலகை வாழ்வித்துக் கொண்டிருக்கிறார்.

- இப்படி ஒரு கோணத்தில் பார்த்தால், நம்மையும் எம்பெருமானையும் சேர்க்கும் பாலமாக விளங்கும் ஆசார்யன், மற்றொரு கோணத்தில் எம்பெருமானிலும் உயர்ந்தும் நிற்கிறார். ஒரு வட்டத்தை, ஒரு புள்ளியிலிருந்து தொடங்கி வரைந்து கொண்டே போனால், அது மறுபடியும் அந்தப்புள்ளியிலேயே ஒன்றிவிடுகிறது. அதுபோன்றே, 'ஆசார்யன்' வாயிலாக 'ஒப்புயர்வற்ற தனிப்பொருள்', 'இறுதிஇலக்கு' என்று எம்பெருமானைத்தெரிந்துகொண்ட பின்பு, அங்கிருந்து மேலே நோக்கினால், துவக்கப்புள்ளியான அதே ஆசார்யனே எம்பெருமானைக்காட்டிலும் உயர்ந்தவராகத்தெரிகிறார்.

## ஒரே தெய்வம், ஒரே குரு, ஒரே பாதை

எம்பெருமான், உலகில் பல மதங்களையும், தத்துவப்பிரிவுகளையும், வழிபாட்டு முறைகளையும் அமைத்து வைத்ததின் நோக்கங்கள் இரண்டு:

- மனிதர்கள் எந்த ஒரு குறிக்கோளுமின்றி அலைந்து திரிவதைக் கட்டுப்படுத்தி, அவர்களை ஒரு நெறிப்படுத்தி, ஏதாவது ஒரு கொள்கைப்பிடிப்பை ஏற்படுத்துதல்.

- அவரவர்களுடைய எண்ணஅமைப்பு, அறிவு மற்றும் முதிர்ச்சிகளின் அடிப்படையில் உண்டான அந்த பிடிப்பிலிருந்து படிப்படியாக அவர்களை உயர்த்தி இறுதியில் மேன்மை பொருந்திய நிலையை அடைவித்தல்.

ஆனால், மேற்சொன்ன கொள்கைப்பிடிப்பு எடுத்த எடுப்பிலேயே

ஒருவரிடம் ஏற்பட்டுவிடாது. முதலில் விருப்பம், பிறகு மதிப்பு, அடுத்தது, ஈடுபாடு என்றெல்லாம் வளர்ந்து, இறுதியில் அதுவே நம் வாழ்வின் இலக்கு ஆகிவிடும். விருப்பம் பல பொருள்களிலும் பாயலாம். மதிப்பு சிலவற்றிலேயே இருக்கும். ஈடுபாடு ஒரே பொருளிடத்தில் கொண்டுசெல்லும். அதுவே இலக்காக மாறிவிட்டால் அந்தப்பொருளையன்றி மற்றொன்றை எண்ணாத, நாடாத கற்புநெறி உண்டாகும். பலர், பல தெய்வங்களை விரும்புவது, பிறகு மதிப்பது, பின்னே ஈடுபாடு கொள்வது என்று இருப்பதை நாம் குறை கூற முடியாது. அது அவர்களுடைய வளர்ச்சிப் பாதையில் இயல்பே! இவற்றை ஒப்புக்கொள்ளும் அதேநேரத்தில், ஒரே ஒருதெய்வத்தை மட்டும் வழிபடுவதைக் குறுகிய நோக்கமென்றும், அன்புமுதிர்ந்து ஒரே இலக்கைப்பிடித்து வைத்துக் கொண்டிருப்பவர்கள் பெருந்தன்மையற்றவர்களென்றும் பிதற்றுவதையே தவறு என உறுதிபடக்கூறுகிறோம்.

பலவற்றில் கால்வைத்து எந்த இலக்குமின்றி அலைந்து திரிவதைவிட, ஒருபாதை, ஒருதெய்வம் மற்றும் இவ்விரண்டையும் காட்டித்தந்த ஒரேகுரு என, ஏதாவது ஒன்றில் காலூன்றி உறுதியாக நின்று பயணிப்பவன் பாதையே மிகவும் சிறந்தது; அறிவுக்கும் பொருந்துவது. சமூக வழக்கில் கற்பு நெறியை உயர்ந்தது என்று போற்றுவார்களேயன்றி, குறுகிய நோக்கம் என்று குறைகூறமாட்டார்கள். உடல், உள்ளம் ஆகியவற்றை ஒருவருக்கேதரும் அந்த உயர்ந்த கற்புநெறியைக்காட்டிலும், இந்த உயிர்க்(ஆத்மா) கற்புநெறி மிகவும் உயர்ந்ததே.

ஏதோ ஒரு பாதையில், தெய்வத்திடம் குருவிடம் இந்த கொள்கைப்பிடிப்பு மற்றும் கற்புநெறி ஏற்படுவதே பயன்தருவது என்றால், எல்லாதிருவுடை ஆசார்யார்களின் முழுவடிவாகத்திகழும் ஸ்ரீராமாநுஜர் ஒருவரையே குருவாகவும், அவருக்கும் அவர் அடியார்க்கும் தொண்டு புரிவது ஒன்றையே குறிக்கோளாகவும், அதற்கு அருளும் பரம்பொருளான எம்பெருமான் ஒருவனையே பற்றிக்கொண்டு வாழும் நெறியின் ஒப்பற்ற பெருமையை என் சொல்வோம்! இதுவே இந்த ராமாநுஜ ஸம்பிரதாயத்தின் தனிச்சிறப்பு.

## ராமாநுஜரின் தனிப்பெருமைகள்

ராமாநுஜரின் வரலாற்றை மெய்யாக, முழுமையாகத் தெரிந்துகொள்ள அவருடைய அணுக்கர்களும், அடியார்களும் அருளிய நூல்களும் அவற்றை அடியொற்றி எழுதப்பட்ட பன்மொழி நூல்களும் நிரம்பக்கிடைக்கின்றன. அவற்றில் அவருடைய விரிவான வரலாற்றைச் சுவைத்து மகிழலாம். அவருடைய தனிப்பெருமைகளில் சிலவற்றை மட்டும் இங்கு பேசிப்பயனுறுவோம்!

எம்பெருமானுக்குச்செய்ய எண்ணிலடங்காத பணிவிடைகள் இருந்தாலும், அவனுக்கு மிகவும் உகப்புதரும் தலையாய பணி, அவனுடைய படைப்புகளாகிய உயிரினங்களை அதிலும் குறிப்பாக மனிதப்பிறவிகளை நல்வழிப்படுத்தி உயர்வடையச்செய்யவேண்டும் என்ற எம்பெருமானின் விருப்பம், குறிக்கோள் மற்றும் அதற்கு அவன் எடுத்துக்கொள்ளும் முயற்சிகளைப் பயனுள்ளவையாக்குவதுதான்! மற்ற பணிவிடைகள், திருப்பணிகள் அனைத்தும் இந்த மேலான தொண்டுக்குத் துணைபுரிபவையே. பசித்திருக்கும் விருந்தினருக்கு உணவு வழங்கும்போது இருக்கை தருவது, விசிறி வீசுவது போன்று தான், மனிதப்பிறவியை மேன்மைப்படுத்தும் உயர்ந்த செயலுக்கு, ஆலயம் கட்டும் பணி, எம்பெருமானுக்கு அணிகலன்கள் சாற்றுதல் போன்றவை துணையாயிருக்கின்றன.

ஸ்ரீவைகுண்டத்தில், ஆதிசேஷன், அனந்தன் என்று அழைக்கப்படும் திருவனந்தாழ்வான், எம்பெருமானுக்குக் குடையாய், சிங்காசனமாய், காலணியாய், படுக்கையாய், மணிவிளக்காய், பூம்பட்டாய் தலையணையாய் சேவை செய்துவருகிறான். அதுமட்டுமின்றி, எம்பெருமான் திருவவதாரம் செய்யும்பொழுதெல்லாம், தானும் அவனுக்குத் துணையாக (ராமனுக்கு அடிமை செய்ய அவன் தம்பி இலக்குவனாகவும் கண்ணனை நெறிப்படுத்தும் அண்ணன் பலராமனாகவும்) அவதரித்தான். ஆனால், இவை எல்லாவற்றிலும் எம்பெருமான் பணியிலேயே மூழ்கியிருந்தமையாலும் அவதாரங்கள் நல்லோரைக் காத்தலோடு தீயாரை அழித்தலிலும் நோக்காக இருந்தமையாலும் கருணை ஒன்றையே முதலாகவைத்து அனைவரையும் திருத்தி ஆட்கொள்ளும் சூழ்நிலை ஆதிசேஷனுக்கு ஏற்படவில்லை. எனவே, அவரே கலியுகத்தில் நமக்காக எல்லோரையும் திருத்தவும் உயர்த்தவும் வேண்டிய எல்லா வல்லமையும் படைத்த 'ஆசார்யன்' என்னும் வடிவத்தையேற்று 'ராமாநுஜராக'ப் பிறந்தார்.

ஆசார்யன் ஒருவருக்கே, தடை, கட்டுப்பாடுகளைத் தகர்த்தெறிந்து ஒருவருக்கு நன்மைதர எம்பெருமானின் சிறப்பு ஒப்புதல் உண்டு. அதுமட்டுமின்றி, எம்பெருமானின் நினைவை நிறைவேற்றும் அவர்கள் மேல்தான், எம்பெருமானின் நினைவும் அருளும் தூண்டுதலும் பாயும்!

உறுதி படைத்த இரும்பாயினும், அது பந்து போன்ற அல்லது வளையம் போன்ற வடிவில் இருந்தால்தான், அதனால் எளிதாக உருண்டோடமுடியும். அதுபோன்றே, பேராற்றல் படைத்த எம்பெருமான் ஆசார்யன் வடிவில் வெளிப்படும்பொழுதுதான் உலகில் பலர் உயர்வும் உய்வும் அடைகின்றனர். தான் எம்பெருமானாயிருந்து செய்ய

இயலாதவற்றைக்கூட, அவனால் ஆசார்யன் வடிவிலும் அவர் வாயிலாகவும் செய்யமுடியும். இந்தப்பெருமை கருதியே, தன் அவதாரங்களைக்காட்டிலும் கூடுதல் எண்ணிக்கையில் ஆசார்யர்களை எம்பெருமான் உண்டாக்கியிருக்கிறான்; உண்டாக்கி வருகிறான். அதுபோன்று எம்பெருமானால் குளிர அருளப்பட்ட ஒரு மாபெரும் ஆசார்ய வள்ளலே 'ராமாநுஜர்'!

- 'உயர்ந்த பண்புகள்' இல்லாதவர்களுக்குக் கிடைக்கும் 'உயர்ந்த குடி' (ஜாதி, குலம்) என்ற பட்டம் உலகில் மதிக்கப்படலாமே தவிர, எம்பெருமானின் திருமுன்பு அவர்களுக்கு எந்தமதிப்பும் இராது; அவர்களை நாமும் போற்றத்தேவையில்லை என உணர்த்தியவர்!
- எந்த வகுப்பில் பிறந்திருந்தாலும் எம்பெருமானிடத்தில் மெய்யான ஈடுபாடு உண்டாயின் அவர்கள் தொழத்தகுந்த, அறிவு மற்றும் அருள் பரிமாற்றங்களுக்கு ஏற்ற பெரியோர் என்று அறுதியிட்டவர்!
- அனைத்துப்பிரிவினரையும் 'தொண்டக்குலம்' என்று ஒன்றுபடுத்தியவர். மிகவும் தாழ்த்தப்பட்ட நிலையில் வாழ்ந்தோரையும் 'திருக்குலத்தார்' எனப் பெருமைசூட்டி அரவணைத்தவர்!
- பெண் அடியார்களுக்கும் தனிமதிப்பும் உயர்வும் தந்து போற்றியவர்!
- திருக்கோவில்களில், மறைதேர்ந்த பெரியோரிலிருந்து எளிய குடிமகன் வரையில் அனைவருக்கும் பொறுப்பும் மதிப்பும் தந்து ஒருங்கிணைத்து எம்பெருமானுக்கு ஊழியம் செய்ய வைத்தவர்!
- அன்பர்கள் எல்லோரும் மதித்துப்போற்றப்பட வேண்டியவர்கள் என்ற இந்த நெறியால், சமயங்களை அகற்றித்தான் தன்மதிப்பு(சுயமரியாதை) தேடவேண்டும் என்ற கொள்கைக்கு மாற்றாக, வைணவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளிலேயே அது (மரியாதை) நிலைபெற்றிருப்பதை நிலைநாட்டியவர்!
- மேலும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் முக்தி உண்டு என்பதற்கும் ஒருபடி இறங்கிப்போய், 'பணிவும், உறுதியும் நிரம்பிய தாழ்த்தப்பட்டவர்களுக்குத்தான் முக்தி உறுதி' என்றும் 'தன்னைத் தாழ நினைத்துக் கொண்டு பணிவுடன் வாழ்வதினாலும் அத்தகைய பணிவுடைப்பெரியோரின் அருளாலும்தான் மற்றவர்கள் முக்திபெற முடியும்' என்றும் அறிவுறுத்தி, வாழ்ந்தும் காட்டியவர். ராமாநுஜர், ஒருமுறை நீராடிவிட்டுவரும்பொழுது தாழ்த்தப்பட்ட குடியில் தோன்றிய பிள்ளையுறங்காவில்லிதாசரைத் தொட்டுக்கொண்டு கரையேறினார். அதற்கு உட்பொருளைக்கேட்டவர்களுக்கு,

'தன்னைப் போன்றவர்களுக்கு உயர்குடி, கல்வி போன்றவற்றால் ஏற்படும் செருக்கு, இதுபோன்ற பணிவுடைய பண்பாளரைத்தொடுவதால் நீங்கிவிடும்' என்று 'தன் நினைவாலும் திருக்கண்ணோக்கினாலும் எண்ணற்றோருக்கு வாழ்வளிக்கும் பெருந்தகையான' ராமாநுஜர், உளமாரக்கூறினார். அதனாலேயே பிள்ளையுறங்காவில்லிதாசருக்கு ராமாநுஜரின் 'ஸ்பர்சவேதி' (தாழ்ந்த உலோகங்களைத் தங்கமாக்கும் மூலிகை) என்னும் புகழ்ப்பெயர் உண்டாயிற்று!

- வேதமும் வேதாந்தமும் கரை கண்டிருந்தாலும், தமிழ்மொழிக்கு, அதாவது ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்குத் தனிமேன்மை தந்து, இன்றளவும் வைணவத் திருக்கோயில்களிலே ஆழ்வார் அருளிச்செயல்களைக் கொண்டு எம்பெருமானை வாயார வாழ்த்தவும் போற்றவும் வழக்கத்தை ஏற்படுத்தி, தமிழை முழங்கச் செய்தவர் ராமாநுஜரே!

- எம்பெருமான் ராமனாக வந்தபோது "நான் உன்னுடையவன் என்று யார் என்னிடம் புகலடைகிறார்களோ, அவர்களை எல்லா இடர்களிடமிருந்தும் காக்கிறேன்" என்றான். அதேபோன்று "எல்லாவற்றையும் விட்டு என்னொருவனையே புகல் (கதி, அடைக்கலம்) எனப்பற்றினால் எல்லாவினைகளிலிருந்தும் விடுவிக்கிறேன்" என கண்ணனாக வந்தபோது உறுதியளித்தான். அதே எம்பெருமான், இக்கலியுகத்தில் ஸ்ரீரங்கநாதனாக வந்து "ராமாநுஜரின் உறவு உள்ளவருக்கும் அவர் தொடர்புள்ளோரின் தொடர்பு பெற்றார்க்கும் முக்தி தருகிறேன்" என்று உறுதியருளி இவ்வுலகம் அவ்வுலகம் (பரமபதம்) ஆகிய இரண்டின் திறவுகோல்களையும் தந்தருளினான் (ஒருமுறை ஸ்ரீரங்கத்தில் பெருமாளும் தாயாரும் (ரங்கநாயகி) சேர்ந்து எழுந்தருளிக் காட்சிதரும் பங்குனி உத்தர நன்னாளில், ராமாநுஜர் அவர்கள் இருவரையும் வேண்டி, தன்னோடு உறவுள்ளவர்கள் மற்றும் தன்னுறவுள்ளவரோடு தொடர்புள்ளவர்கள் என அனைவருக்கும் முக்தி நல்க வேண்டும் என நமக்காக இந்த வரத்தைப்பெற்றார்). எளியோரும் எல்லோரும் உய்வடையவேண்டும் என்ற பெருந்தாயுள்ளத்தோடு கேட்ட ராமாநுஜருக்கு ஸ்ரீரங்கநாதன் கொடுத்த இந்த உறுதிமொழி, ராமனாகவும் கண்ணனாகவும் வந்து விபீஷணன் மற்றும் அர்ஜுனனுக்குக்கொடுத்த அறுதிமொழிகளைக் (சரம ஸ்லோகம்) காட்டிலும் வலிமை வாய்ந்தவை!

- "ராமாநுஜர் வாங்கிவந்த வரத்தாலேயே நாம் எல்லா நன்மைகளையும் பெற்றுவிடலாம்". எனவே, நாம் ஒன்றும் செய்யத்தேவையில்லை என்ற முடிவுக்கு வந்துவிடலாகாது. நமக்காக எல்லாம் செய்த ராமாநுஜர் காட்டியவழியிலே சென்றால்தான் ராமாநுஜரின் உறவு நமக்கு ஏற்படும்; உறுதிப்படும். எனவே, ராமாநுஜர் தொடர்பால் முக்தி என்பது கொண்டு 'முக்திக்குத்தனியாக நாம் முயலவேண்டியதில்லை' என்றுதான் தேறுமே தவிர, 'முக்தி தரும் ராமாநுஜர் தொடர்பை உண்டாக்கிக்கொள்ளவும் தக்கவைத்துக்கொள்ளவும் முறைப்படி வாழவேண்டும்' என்ற கொள்கையில் எந்த மாற்றமும் இல்லை. எதையும் எதிர்பாராது, கருணை ஒன்றையே கொண்டு நம்மை அணுகுவது ராமாநுஜர் பெருந்தன்மை என்றால், அத்தகைய பெரியார் உள்ளம் குளிரும் வண்ணம் நல்லறிவாலும் நெறிகளாலும் தூய தொண்டுள்ளத்தாலும் தன்னை அணிசெய்து கொண்டு அவரை வரவேற்பதன்றோ நம் பெருங்கடமை!

## ராமாநுஜரின் தனிப்பெருமை - 'ஜகத்குரு'

- ராமாநுஜரை 'ஜகதாசார்யன்', 'ஜகத்குரு' என்றெல்லாம் அவருடைய அடியவர்களாகிற நாம் அனைவரும் போற்றுகிறோம். பல சமய மரபுகளைச் சார்ந்தோரும் தத்தம்முதல்வர்களை (முதல் ஆசார்யர்களை) ஜகத்குரு என்றே போற்றுகின்றனர். சராசரிக்கண்ணோட்டத்தில் உலகம் முழுதும் ஒருவருடைய கொள்கைகள் பரவி, அவருடைய அடியார்கள் திக்கெட்டிலும் திகழ்ந்தால்தான் அவரை 'ஜகத்குரு' என்பது பொருளுடையதாக இருக்கும். இந்த இலக்கணத்தின்படி பார்த்தால் பலரை ஜகத்குரு என்று கொள்ளமுடியாமல் போகலாம். அல்லது கொள்கைப்பரப்புத் திறமையால் உலகம் முழுதும் பரவிக்கொண்டிருக்கும் சமயங்களின் குருமார்களுக்கே அந்தப்பெயர் பொருத்தமுடையதாக இருக்கலாம்.

- யார் ஒருவர் உலகெல்லாம் வாழவேண்டும் என்று நினைக்கின்றாரோ, யாருடைய உள்ளத்தில் உலகின் உய்வுக்குத்தேவையான அன்பும் கருணையும் நிறைந்து ததும்பி உள்ளனவோ, அத்தகையவரை ஜகத்குரு என்று போற்றுவர். வையம் எல்லாம் வாழவேண்டும் என்ற உயர்ந்த நோக்கம் கொண்ட அருளாளர்கள் பல்வேறு மதங்களிலும் இருக்கிறார்கள். அவர்களையும் ஜகத்குரு என்று அவர்களுடைய தொண்டர்கள் அழைக்கின்றனர்.

- உலகு என்பது இவ்விடத்தில், அதனில் வாழும் மனிதர்கள் மற்றும் பிற உயிரினங்கள், இயற்கை என எல்லாவற்றையும் ஒட்டுமொத்தமாகக் குறிக்கும் சொல் அல்ல. உலகில், பயனுள்ள வாழ்வு, மெய்யான வாழ்வு (ஆன்மிகம்) வாழ விரும்புபவரும் அப்படி வாழ்பவருமே உலகில் ஒரு பொருளாக மதிக்கப்படுவர். அவர்களுக்கே உலகு (ஜகத்) என்று இந்த இடத்தில் பெயர். அவர்களுக்கெல்லாம் வழிகாட்டியாக தலைவராகத் திகழ்பவர் 'ஜகத்குரு' ஆவார்.

- யாரை எம்பெருமான் தன் திருவுள்ளத்தால் உலகெல்லாம் நன்மை அடைய நினைத்து அனுப்பினானோ, எவருடைய வழி இவ்வுலகில் நல்வாழ்வுக்கும் மறுமைப்பெருவாழ்வுக்கும் ஒப்பிலாத உயர் வழியாயிருக்கிறதோ, அவரே, 'ஜகத்குரு' என்ற பெயருக்கு முழுவதும் பொருந்துபவர். அவ்வகையில் கருணை மட்டுமின்றி மெய்யறிவு நிறைந்தவரும் எம்பெருமானால் உலகை உய்விக்க அனுப்பப்பட்ட வருமான ராமாநுஜரை 'ஜகத்குரு' என்று அழைப்பதுதான் சாலப் பொருந்தும்.

எனவே பரந்த புகழுடையவர்கள் 'ஜகத்குரு' எனக் கொண்டாடப்படுகின்றனர். பரந்த உள்ளத்தால் சிலர் அப்பெருமை பெறுகின்றனர்; என்றாலும் நிறைந்த தகுதியே ஒருவரை 'ஜகத்குரு' என உறுதிசெய்வது.

எம்பெருமானை ஜகன்னாதன், லோகநாயகன், ஜகதீஸ்வரன் என்றெல்லாம் போற்றுகிறோம். ஆனால், உலகில் உள்ள உயிரற்றவை, விலங்கு மற்றும் தாவரவகைகள் எம்பெருமானை உணர்வதில்லை. உணரும் நிலையில் உள்ள மனிதர்களில் பலர், அறியாமையிலும், உலக மயக்கங்களிலும், தெய்வம் இல்லை என்ற கொள்கையிலும் சிக்கியும், பிறமதம் மற்றும் தெய்வ வழிபாடுகளில் ஈடுபட்டும், எம்பெருமானை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதைப்பார்க்கிறோம். இப்படி பெரும்பான்மையினரால் அறியப்படாத, போற்றப்படாதவன் என்பதை வைத்துக்கொண்டு, அவனே உலகைப் படைத்துக்காத்து நிற்பவன் என்பதை மறுக்கவோ மாற்றவோ முடியாது. ஏனெனில், எம்பெருமானை 'லோகநாயகன்' என்று அறுதியிடுவது வேதங்களின் முடிவைக் கொண்டேயன்றி மக்கள் பெரும்பான்மை மற்றும் ஈடுபாட்டைக் கணக்கில் கொண்டு அல்ல. தன்னை உணரவியலாத உணராத உயிர்கள் அனைத்தையும்கூட எம்பெருமானே காத்து வருகிறான் என்றும் உணராது வாடும் உயிர்களுக்குத் தன்னைப்பற்றிய அறிவு, உணர்வு மற்றும் வழிகளையும் வழங்கவே, அருளாளர்களையும் சான்றோர்களையும் அவன் இப்புவிக்கு அனுப்பியுள்ளான் என்பதே உண்மை!

ஜகத்தால் (உலகால், உலகின் பெரும்பகுதி மக்களால்) குரு எனக் கொண்டாடப்படுபவர் ஜகத்குரு என்று கொள்ளாமல், 'திருந்திய மற்றும் தெளிவான உலகத்தவர்களால் கொண்டாடப்படவேண்டியவரே **ஜகத்குரு**' என உணர்ந்து அத்தகையோரின் பெருமைகளை உலகறியச்செய்வது அறிஞர்கள் மற்றும் ஆர்வலர் கடமையாகும். சுருங்கக்கூறின், உலகத்தவரின் அறிமுகம், ஒப்புதல், தீர்ப்பு போன்றவற்றைக் கடந்து 'ஜகத்குரு'வாக விளங்குபவர் 'ராமாநுஜர்', அவரே ஜகத்குரு என மற்றவருக்கு உணர்விக்க வேண்டியது நம் வேலை.

## ராமாநுஜர் - எல்லாம் சேர்ந்த வடிவம்

- மீனாக வந்த வடிவில் (மச்சாவதாரம்) எம்பெருமான் வேதங்களை அசுரர்களிடமிருந்து மீட்டு பிரம்மாவிடம் சேர்த்தார். இவரோ, வேதங்களை, எதிர்ப்போரிடமிருந்தும் பொய்ப்பொருள் உரைப்போரிடமிருந்தும் காப்பாற்றி (எம்பெருமானே உயர் தெய்வம், உயர் வழி மற்றும் உயர்பயன் எனக்காட்டித்தந்து) எம்பெருமானிடம் சேர்த்தார்.
- எம்பெருமான் (கூர்மாவதாரம், மோகினி அவதாரங்கள் எடுத்து) தேவர்களுக்கு, புத்துணர்வும் பொலிவும்தரும் அமிர்தத்தை வழங்கியது போன்று, உயிர்களைத்திருத்தி உய்விக்கும்பணியில் எம்பெருமானுக்கே களைப்பும் சோர்வும் ஏற்பட்டபொழுது, தான் புவியில்பிறந்து தன்னரும்பணியால் எம்பெருமானின் பணியை எளிதாக்கி அவனுக்கே புத்துணர்வு கொடுத்தவர்!
- வராஹன் காத்த இந்த பூமியை, ஆன்மநலமும் வளமும் உண்டாக்கி இவரும் காத்தார்!
- இரணியனைக்கொன்று பிரஹலாதனைக்காத்த நரஸிங்கத்தைப்போல அறியாமை, செருக்கு, மயக்கம் போன்ற பெரும்பகைவரை அழித்து கணக்கிலாத நல்லுயிர்களைக்காத்தார்!
- வாமனனைப்போல், கருணையாலும் கடமையாலும் உலகெல்லாம் தன் திருவடிகளை வைத்தருளினார்!
- ராமனைப்போல் (திருமால்நெறியாம்) அறம்காத்தவர்!
- கண்ணனைப்போல் கீதையை(கீதையின் செம்பொருளை) (பல்லாயிரக்கணக்கான அருளன்பர்களுக்குச்) சொன்னவர்!
- பணிசெய்யும்போது இளையவனாகவும் (லக்ஷ்மணன்) எம்பெருமான் பணிகளை நெறிப்படுத்தி மேற்பார்வையிடும்போது அண்ணனாகவும் (பலராமன்) விளங்கினார்!

- எம்பெருமானின் சக்கரம் போல அடியார் துயரத்தை விரைந்து போக்குபவர். அதன்பேரொளியைப்போல, ஆன்ம ஒளியை இருண்டுபோன வாழ்வுகளில் ஏற்றிவைத்து, நல்வழி (சு–தர்சனம்) காட்டியவர். எம்பெருமானுடைய சங்குபோல உண்மைப்பொருளை முழங்குபவர். கதை (கதாயுதம்) போல(பொய்மை) தகர்ப்பவர். சார்ங்கம் (பெருமாளின் வில்) போல சரமழை (ஆழ்பொருளமுதம்) பொழியும் அருட்கொண்டல்! நாந்தகம் (பெருமாளின் வாள்) போல (ஆன்ம அறிவு மற்றும் ஆக்கப்பாதைகளில் தோன்றும் இடையூறுகளைப்) பிளந்து வழிசெய்பவர்!

- ஆழ்வார்களுடைய திருவடிகளில் மிகுந்த காதல்கொண்டவர் ராமாநுஜர். அவர்களின் திருவருளால் தமிழ்மறையில் (நாலாயிர திவ்ய பிரபந்தம்) அமைந்துள்ள நுண்பொருள் யாவையும் அறிந்தவர். பாசுரப்பொருள் மட்டுமின்றி, அவர்களின் திருவுள்ளக்குறிப்பும் நன்குணர்ந்தவர். அதனால்தான், திருமாலிருஞ்சோலை (அழகர்கோவில்) அழகருக்கு நூறுதடா வெண்ணெய் அக்காரவடிசில் நேர்ந்துகொண்ட ஆண்டாளின் விருப்பத்தை, அந்தப்பாசுரத்தைக் கொண்டு உணர்ந்து அந்த வேண்டுதலையும் நிறைவேற்றி வைத்தார். முதலாழ்வார்களைப் போன்று (பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்) சொன்மாலை சூட்டி, ஞானச்சுடர் விளக்கேற்றி திருக்கண்டவர். அதாவது, எம்பெருமானின் புகழ்பாடி, புகழ்பரப்பி, அவனை உணரப்பெற்றவர். திருமழிசை ஆழ்வாரைப்போல் (வாள் உறையிலிடாதவர்) சோர்வில்லாது வைணவத்தை நிலைநாட்டும் பெரும்பணியில் திளைத்தவர். பெரியாழ்வாரைப் போன்றே எம்பெருமானுக்கு எப்பொழுதும் பல்லாண்டுபாடும் பரிவு கொண்டவர். குலசேகராழ்வாரைப்போன்றே ஏதேனுமாகி எம்பெருமானுக்கு அடிமைசெய்ய எண்ணுபவர். திருப்பாணாழ்வார் போல் திருவரங்கனின் திருமேனியெழிலில் மூழ்கியவர். தொண்டரடிப் பொடியாழ்வாரைப் போன்றே, அடியார்களிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். மதுரகவியாழ்வார்போல், ஆசார்யன் திருவடிகளிலே பேரன்பு கொண்டவர். திருமங்கையாழ்வாரைப்போலே, திருக்கோவில் பணியே தன்வாழ்வெனத் திகழ்ந்தவர். நம்மாழ்வரைப்போலே, மதிநலம் நிறைந்தவர். ஆண்டாளைப்போல் அரங்கன் திருவடிகளில் ஆராக்காதல் கொண்டவர்.

- எல்லா ஆசார்யர்களும் ராமானுஜர் உறவாலே நிறைவு (முக்தி பெறுகின்றனர் என்பது வைணவப்பெரியோரின் ஒருமித்த கருத்து. ராமானுஜருக்கு முன்வாழ்ந்த ஆசார்யர்களுக்கும் ராமானுஜருடைய ஆசார்யர்களுக்கும் இது பொருந்தாதே எனில்; 'ஒவ்வொரு பெரியார் திருமுடியிலும் (தலை) அவர்தம் ஆசார்யர் திருவடிகளும், அவர் திருவடிகளில் அவர்தம் சீடர் திருமுடியும் திகழும். இந்த அடிப்படையில் ராமானுஜருக்கு முன்னே இருந்த ஆசார்யர்கள் அவருடைய திருமுடியின் தொடர்பாலும், அவருக்குப் பின்னே தோன்றியவர்கள் அவருடைய திருவடியின் தொடர்பாலும் பேறு பெற்றனர்' என்ற நோக்கில் அக்கருத்து பொருத்தமுடையதே! மேலும், ராமானுஜர் தோன்றுவதற்கு சில நூறு ஆண்டுகளுக்கு முன்னமே, நம்மாழ்வார் நாதமுனிகளிடம் ராமானுஜரின் திருவுருவத்தைக்கொடுத்து இவரே 'பவிஷ்யதாசார்யர்' (இனி வரப்போகும் ஒப்புயர்வற்ற ஆசார்யன்) என்று அருளினார். எனவே, ராமானுஜர் நிலவுலகில் தோன்றிய பொழுது பிறப்பட்டதேயன்றி எம்பெருமான் மற்றும் ஆழ்வாரின் நினைவில் முன்னமே எழுந்தருளிவிட்டார். அந்த வகையிலும், அவரருளாலேயே ஆசார்யார்களனைவரும் முக்தி பெற்றனர் என்பது பொருளுடையதே!

இப்படியாக எம்பெருமானின் அவதாரங்கள், ஆயுதங்கள் மற்றும் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் என இவர்கள் அனைவரின் ஒட்டுமொத்த அருள் வடிவம் ராமானுஜரே!

### அபிமானிகளும் தாசர்களும்

ராமானுஜரிடம் ஈடுபாடு கொண்டுள்ளோரை நான்கு பிரிவுகளாக வகுக்கலாம்.

- 'எண்ணிலடங்காத பெரியோர்கள் இந்த மண்ணில் பிறந்து வாழ்ந்ததுண்டு. அவர்களில் ராமானுஜரும் ஒருவர்' என்ற கருத்தினர்.
- மிகவும் போற்றத்தகுந்த பெரியோர் சிலரில் ஒருவர்.
- எம்பெருமானைக் காட்டித்தந்து அவர் திருவடி அடைவிக்கும் ஒரே குரு.
- ராமானுஜரைத்தவிர, யாரையும், ஏன் எம்பெருமானைக்கூட வழிபடாத கொள்கை உறுதி கொண்டவர்கள்.

அதே போல் ராமாநுஜனடியார்களிடம் மூன்று இலக்கணங்களைக் காணலாம்.

**1. மரபு ஒழுங்கு,**

- திருமண் (நாமம்) அணிந்து கொள்ளுதல்
- பஞ்ச சம்ஸ்காரம் (திருவடி சம்பந்தம், முத்ரா தாரணம், சமாஸ்ரயணம்)- அதாவது திருமண் அணிந்துகொள்வதோடு, தோள்களில் சங்கு சக்கரப்பொறியொற்றிக் கொள்ளுதல், தான் அடியார் எனக்காட்டும் திருப்பெயர் பெற்றுக்கொள்ளுதல், மந்திரோபதேசம் பெறுதல் மற்றும் எம்பெருமானை முறையோடு வழிபடுதல் என்ற இந்த ஐந்தையும் ராமாநுஜர் வகுத்துவைத்த ஆசார்ய மரபின் வழிவந்தவர்களிடம் பணிந்துபெறுதல்.
- குடுமி, உடை (பஞ்சகச்சம்), ஆலயம் செல்லுதல், வழிபாடுகள், தூய்மை மற்றும் பிற கட்டுப்பாடுகள் (ஆசாரங்கள்)

**2. அடிப்படைப்பண்புகள்**

நேர்மை, உண்மை, இரக்கம், ஈகை, அடக்கம், உறுதி, உழைப்பு, அன்பு போன்றவை

**3. சிறப்புப்பண்புகள்**

எம்பெருமான் ஒருவனையே தனக்குத்தலைவனாகக் கொண்டு பிற தெய்வங்களைத்தொழாதிருக்கும் சமயக்கற்பு நெறி, அடியார்களிடத்தும், ஆசார்யார்களிடத்தும் விஞ்சிய ஈடுபாடு போன்றவை.

இந்த மூன்றும் நிரம்பப்பெற்றவர்களே மெய்யான ராமாநுஜ தாசர்கள். இத்தகையவர்கள் உலகிற்குக்கிடைத்தற்கரிய பெருஞ்செல்வம் போன்றவர்கள்! என்றாலும், இந்த மூன்றில் ஏதாவது ஒன்றோ இரண்டோ உள்ளவர்கள் கூட, பெரியோர் மற்றும் அடியார்கள் பார்வைபட்டுவிட்டால் தங்களிடம் இல்லாத பிறவற்றையும் விரைவில் பெற்றேதீருவார்கள்.

ராமாநுஜரை உள்ளத்துள்ளே குடிவைத்து இருப்பவரிடத்திலிருந்து பல தன்மைகள் வெளிப்படும்.

- திவ்யதேசங்களில் (திருக்கோவில்கள்) ராமாநுஜருக்கு இருப்பது போன்றே மிகவும் ஆழ்ந்த ஈடுபாடு ஏற்படும். திவ்யதேசங்களையோ, அடியவர்களையோ காணாவிட்டால் நோய்வாய்ப்பட்டவர் போல வருந்துவர். எந்த திவ்யதேசத்திற்குச் சென்றாலும் அங்கு என்ன

சீரமைப்பும், மாற்றமும், அழகும் செய்யலாம் என்பதுபற்றியே எண்ணமெல்லாம் இருக்கும். அங்கு ஏதேனும் குறைபாடு இருப்பின், அதனைப்போக்கும் வரை இவர்களுக்கு தூக்கமே வராது. எத்தனை பணிகள் செய்தாலும் அதனால் உள்ளம் நிறைவடையாமல் இன்னும் பல பணிகள் செய்யவேண்டும் என்ற ஆர்வமே விஞ்சியிருக்கும். கண்ணன் கீதையில், அன்புடன் வழங்கப்படும் 'இலை, பூ, பழம், நீர்' போன்றவையே தான் விரும்புவதாகச்சொன்னாலும் தங்கள் பேரன்பினால் உலகில் உயர்ந்தவை என என்னென்ன உண்டோ அவை அத்தனையும் எம்பெருமானுக்குச் செய்து அழகுபார்க்க விரும்புவார்கள்.

- ஆழ்வார்களின் மீதும் அவர்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள் மீதும் மிகுந்த ஈடுபாடு உண்டாகும்.
- எப்பொழுதும் அருளிச்செயல்களைப்பற்றியும் ஆசார்யன் பெருமைகளைப்பற்றியுமே பேசத்தோன்றும். இவற்றுக்கு மாறானவற்றைப்பேசவோ பாடவோ வாய் விரும்பாது.
- அடியாரைக்காண மிகவும் விரும்புவார்கள். அவர்களைக் கண்டால் மிகஉகப்புடன் அவர்களுக்கு எல்லா சேவைகளையும் செய்ய முனைவார்கள்.

மேற்சொன்ன அறிகுறிகளைக் கொண்டு, ராமானுஜரின் ஆட்கொள்ளுதலின் அறிகுறிகள் புலனாகின்றன. இந்த ஆட்கொள்ளுதலுக்கு இன்னும் இலக்காகாதவர்கள் ராமானுஜரிடத்தில் என்ன வேண்டிக்கொள்ள வேண்டும் என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

## வளர்பிறை

ஒரு சரியான பாதையில் அடிவைத்துவிட்டால், அதன்பின் பயணம் சீராகவும் விரைவாகவும் முன்னேறிக் கொண்டே போவதைப் பார்க்கிறோம். அதுபோல, ஏதாவது ஒரு சாக்கில் ராமானுஜர் நம் உள்ளத்தின் உள்ளே குடிபுகுந்து விட்டால், வளர்பிறைபோல் நமக்குள்ளே வளர்ச்சிகள் நிகழத்தொடங்கிவிடும்.

1. ஸ்ரீராமானுஜரைப்பற்றி ஒன்றுமே தெரியாத நிலையை 'அமாவாசைக்கு' ஒப்பிடலாம்.

2. ஒருமுறையேனும் அவர் பெயரைக்கேட்டோ, அவர் திருவுருவைக்கண்டோ, தெரிந்துகொண்டால் அதை முதல்பிறை எனலாம்.

3. ராமாநுஜரைக்கேட்டும் பார்த்தும் தெரிந்துகொண்டவர்களுக்கு, அவரைப் பற்றி மேன்மேலும் அறிந்துகொள்ள ஆர்வம் பிறத்தல்.

4. வெறும் ஆர்வம், தேவை மற்றும் சூழ்நிலை நெருக்கடிகளால் அவரை சேவிக்கச்சென்றவர்கள், உண்மை அன்போடும் ஈடுபாட்டோடும் மீண்டும் மீண்டும் ராமாநுஜரைத் தரிசிக்க விரும்புதல்.

5. நாம் தரிசிக்கும் ராமாநுஜர் தொடர்புடைய திருத்தலங்கள், அவற்றின் பெருமைகள், என நம் நாட்டம் விரிவடைதல்.

6. ஒவ்வொருமுறை அவரைக்காணும்பொழுதும் ஒருபுதிய உணர்வு ஏற்பட்டு அன்பு கூடி, பலதெளிவுகள் உண்டாதல்.

7. அவர் மீது உண்டான ஈடுபாடு, அவர் வகுத்து, வாழ்ந்து காட்டிய நெறிகள் மற்றும் வாழ்க்கை முறைகளின் மீதும் பரவி, அவற்றை முழுமனதோடு கடைப்பிடிக்கத்தொடங்குதல்.

8. ராமாநுஜர் தன் வாழ்நாளில் மதித்துப்போற்றிய பெரியவர்கள், உகந்து கொண்டாடிய அவர் அடியார்கள் என அவருக்குப்பிடித்தவர்கள் எல்லாம் நமக்கு மிகவும் பிடித்தவர்களாதல்.

9. இவர்கள் அனைவரும் ராமாநுஜரின் மதிப்பையும் அன்பையும் அடைவதற்கு அடிகோலிய நற்பண்புகள் எவை என்று அறிந்து அவற்றை வளர்த்துக்கொள்வதோடு ராமாநுஜருக்கு இனியவர்களான அவர்கள் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு ராமாநுஜரை அணுகுதல்.

10. இதற்கு முன்பு வெறும்பொருளாக, பெரும்பொருளாக, பரம்பொருளாகத் தெரிந்த எம்பெருமானின் புதிய, இனிய முகங்கள் வெளிப்படுதல். (எம்பெருமானார்-அதாவது ராமாநுஜர் அருளோடு எம்பெருமானை சேவிப்பவர்கள் அடையும் இன்பமும் பயனும் தனிச்சிறப்பு வாய்ந்தவையாயிருக்கும்).

11. தன்னைப்போன்று ராமாநுஜரைப் பயில்பவரைக் காணவும் கேட்கவும் கலந்துரையாடி நெருக்கம் பெறவும் பெரும் விருப்பம் கொள்ளல்.

12. யாரெல்லாம் ராமாநுஜரைத் தெரிந்துகொள்ளாமலும் உணராமலும் இருக்கின்றார்களோ அவர்களிடம் சென்று இராமானுசன் புகழ்பாடி அவர்களைத்திருத்திப்பணி கொள்ளுதல்.

13. ராமாநுஜன் பேரோதும் பெரியோர் திருவடிகளைப்பிரிந்து இருக்கமுடியாத நிலைமை.

14. கனிந்த இந்த அன்பு அடிமையாகி, திருக்கோவில்களுக்கும், ஆழ்வார், ஆசார்யர், அடியார்களுக்கு வேண்டுவன மற்றும் விரும்புவன எல்லாம் இடையறாது செய்து மகிழ்கை.

15. ராமாநுஜர் கட்டிக்காத்து நமக்குத்தந்த இந்தசம்பிரதாயத்தை, நாம் பாதுகாத்து மேன்மேலும் வளர்ப்பதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு, அதற்காக அயராது பாடுபடுதல்.

16. இறுதியாக ராமாநுஜருடைய அளப்பரிய பேரருளுக்கு இலக்காதல் (ராமாநுஜன் திருவடி சேர்தல் அல்லது இவ்வுலகில் மீண்டும் பிறந்து அவர் திருவடிகளுக்குத் தொண்டு செய்தல்) என்ற முழுநிலவு (பௌர்ணமி).

இந்த வளர்ச்சி நிலைகள் யாவும் இராமாநுஜனடியார்களுக்கு ஏற்படுபவை. ராமாநுஜர் திருவுள்ளம் மற்றும் திருவருளின்படி இவைகளின் வரிசையும் விரைவும் அமையும்.

### பரிஹாரம், பலன், ஆன்ம வளர்ச்சி...

பலர் ராமாநுஜருடைய திருக்கோயிலுக்கு குறைநீங்கவும் (பரிஹாரம்) பலன் கருதியும் வருகின்றார்கள். ராமாநுஜர் ஆதிசேஷனுடைய அவதாரம் என்ற கணக்கில் பல ஜோதிடர்கள் ராகு கேது தோஷம் நீங்குவதற்காக இங்கு பலரை அனுப்புகின்றனர். இந்தச்சூழ்நிலையை மூன்று வகையான கண்ணோட்டங்களில் ஆராயலாம்.

- இவ்வளவு பெரிய ஆசார்யனை இந்தச்சிறிய பயன்களுக்காக மக்கள் அணுகுகின்றார். இது மடமை!
- மிகப்பெரிய கொடிய குறையான பிறவி நோயையே தீர்ப்பவர் ராமாநுஜர். அதுமட்டுமல்ல, "இத்தனை அவதாரங்கள் எடுத்தும் பெரிய அளவில் மாற்றம் ஒன்றும் செய்யமுடியவில்லையே" என்ற எம்பெருமானின் குறையையே களைந்தெறிந்தவர் ராமாநுஜர்! எனவே, இதுபோன்ற திருமணத்தடை, உடல்நலக்கேடு, ஆயுள்கண்டம், மக்கட்பேற்றுத்தடை (புத்ர தோஷம்) போன்றவற்றை அவர் போக்கவல்லவர்; அவர் கருணையே வடிவானவர். உயிர்கள் யாவும் அவர் உயர்கருணைக்கிலக்கு! ஆதலின், தன்னை நாடிவருபவரின் குறைகளை உறுதியாகப் போக்குவார்.
- முக்தி நல்கும் ராமாநுஜரைச் சிறுபயன் கருதி அணுகுவது தொடக்க நிலைதான்! ஒவ்வொரு ஆசிரியனும் தன் மாணாக்கர்களுக்குக் கற்பித்து, அவர்களை மேல்வகுப்புகளுக்கு உயர்த்துவதுபோல், எம்பெருமானும் ஆசார்யர்களும் தன்னைநாடி வரும் எளியவர்களை உயர்நிலைக்குக் கொண்டு செல்கின்றார்கள். கோவில்களின் அமைப்பும் நோக்கமும் நாடிவருபவர் நிலை உயர்த்துதலே!

அன்பர்கள், படியேறி கோவிலுக்குள் சென்று வழிபட்டு, படியிறங்கி வெளியறேும் பொழுது, அவர்கள் நற்பண்புகள், ஆற்றல், ஆக்கம், நோக்கம் என ஆன்மிகநிலைகளில், படியேறி உயரத்தொடங்குவார்கள். ஆனால், இந்த முழுபொறுப்பையும் கோவில், எம்பெருமான் மற்றும் ஆசார்யன் தலைகளில் கட்டிவிட முடியாது. 'இராமாநுசன் அடியார்' அனைவரும் இதற்கு உறுதுணையாக நிற்கவேண்டும்.

ராமாநுஜரின் நல்ல அறிமுகமும், உறவும், அவர் திருக்கோவிலின் படிகளை மிதித்து உட்புகுவார் அனைவருக்கும் உண்டாகுமாயின், எளிய அன்பர்களும் கூடப் படிப்படியாக முன்னேறி விடுவர். பெரும்நன்மை தரவல்ல ஒரு அருட்கடலிடம் சிறுநன்மைகளை நாடிவந்தோமே என்ற குற்ற உணர்வும் வெட்கமும், அந்த முதிர்ந்த நிலையில் தானாகவே உண்டாகும். தேடித்தேடி, அழுது வேண்டிப்பெற்ற மற்றும் இன்னும் பெறாத நன்மைகளெல்லாம், வேண்டுதல் மறந்து, அன்பினால் ராமாநுஜர் அடி தொழத்தொடங்கும்போது, நம்மைத்தேடி வரும். அன்னை, தந்தை, சுற்றம், நட்பு, உடைமை, உயிர் அனைத்தும் ராமாநுஜரே என்ற முடிவும் உறுதிபெறும். இதற்கான வழிகளை அமைத்துத்தருவதே 'ராமாநுஜ தாசர்களின்' தலையாய கடமை.

## ஆயிரமாவது பிறந்த ஆண்டை நோக்கி.....

வரும் 2017ம் ஆண்டு ராமாநுஜருடைய ஆயிரமாவது பிறந்த ஆண்டாக அமைகின்றது என்பது நாம் அனைவரும் அறிந்ததே. ஆண்டுக்கு ஒரு முறை கதிரவன் சுழற்சியில் தொடங்கிய இடத்திற்கே வருகின்றான் என்றால் அந்த நாளுக்கு ஒரு சிறப்பு உண்டு. அதனாலேயே பிறந்த நாள் என்று ஒவ்வொருவரும் ஆண்டுக்கு ஒருமுறை கொண்டாடுகின்றனர். புத்தாண்டு எனச் சித்திரையிலும் அனைவரும் கொண்டாடி மகிழ்கிறோம். இப்படி நூறு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் சதாப்திக்கு ஒரு பெருமை உண்டு. இப்படியே, ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறை வரும் ஸஹஸ்ராப்திக்கு ஒரு மிகப்பெரிய பெருமை உண்டு.

ஸ்ரீராமாநுஜர் இவ்வுலகைவிட்டகன்று பலநூறு ஆண்டுகள் கழிந்துவிட்டன. ஒருபார்வையில் இது உண்மையே. என்றாலும், பகவதம்சம் நிறைந்த பெரியோர்களின் திருமேனி உலகத்தைவிட்டு மறைந்தாலும் அவர்களின் அருளாட்சி உலகு உள்ளவரையில் இருந்துகொண்டேயிருக்கும். அது மட்டுமல்ல தாம்பிறந்து வாழ்ந்த காலத்தைக்காட்டிலும், மறைந்தபின் வாழ்கின்றபொழுது, அவர்கள் கருணையும் ஆற்றலும் பன்மடங்கு கூடுதலாயிருக்கும். ராமாநுஜரின்

காலத்திற்குப்பின்பும் பல ஆசார்யர்கள், அவர்கள் ஆற்றிய அரும்பணிகள், அருஞ்செயல்கள் என ராமாநுஜரின் அருளாட்சி சிறப்புற நடைபெற்றுக்கொண்டேயிருந்தது. இப்பொழுதும் கூட நமக்குள் ஒற்றுமை ஏற்பட்டு, ஒருங்கிணைந்த வளர்ச்சித்திட்டங்களும் செயல்படுத்தப்படுமானால், 'ஆயிரம் ராமாநுஜர்களின்' ஆற்றல் பல நூறாயிரம் 'ராமாநுஜன் அடியார்களாக' வெளிப்பட்டு, நம் மரபும் உலகும், வியத்தகு வளர்ச்சியையும் மாற்றத்தையும் அடைய முடியும்!

ராமாநுஜரைப் பற்றித் தெரிந்து கொண்டு, அவர் திருவடிகளையும் பெருமைகளையும் எப்பொழுதும் நினைப்பது என்பது முதல் கட்டம். இதற்கு அடுத்தகட்டம் அவரைப்பல்வகையாலும் கொண்டாடுவது. சொல்லால் போற்றியோ, பாடியோ, பொருளைக்கொண்டு நாம் விரும்புவனவெல்லாம் அவருக்குச்செய்து மகிழ்ந்தோ, அடியவர்களைக் கூட்டி அறிவு மற்றும் அருள் விருந்து கொடுத்தோ (காலக்ஷேபங்கள் மற்றும் ததீயாராதனங்கள்), இசை, நடனம் போன்ற கலைநிகழ்ச்சிகளின் வாயிலாகவோ ஸ்ரீராமாநுஜரைக் கொண்டாடலாம். ஆனால், கொண்டாட்டம் என்பது வெறும் கூடிக்கலைகின்ற நிகழ்வு அல்ல. ஆழத்திலும் அகலத்திலும் 'ராமாநுஜர்' என்கிற உணர்வோட்டம் பரவுவதே நாம்சொன்ன கொண்டாட்டங்களின் நோக்கம்.

பலநூறு ஆண்டுகளுக்குப்பின், இப்பொழுது மீண்டும் ஸ்ரீபெரும்பூதூரில் பொதுமக்கள் ஆயிரக்கணக்கில் வரத்தொடங்கியிருக்கிறார்கள். இவர்கள் பெரும்பாலும் முதல் நிலையில் உள்ளவர்கள். இவர்கள் படிப்படியாக வளர்ந்து அவரைப் புரிந்து, அணுகி, சரணடைந்து பயனடைய பல வருடங்கள் ஆகலாம். ஆனால், இதற்கெல்லாம் கால அவகாசம் இல்லாததால், இவர்களை இந்த ஆயிரமாவது ஆண்டிற்குள் எந்த அளவிற்கு மேம்படுத்த முடியும் என்றுதான் நாம் பாடுபடவேண்டும். ஆண்டுமுழுதும் மெத்தனமாக இருந்துவிட்டு தேர்வுக்கு சிலநாட்களுக்குமுன் போராடித்தேர்ச்சி பெறும் மாணவன் போல், நாம் இந்த ஆண்டாவது, முழுமூச்சோடு உரிய முறையில் செயல்பட்டு, 'ராமாநுஜர் தொண்டன்' என்ற தேர்வில் வெற்றிபெறவேண்டும். இது நம் அனைவருக்கும் இருக்கும் பொதுவான கடமை. இதற்காக நாம் அனைவரும் இணைந்து உழைக்கவேண்டும்.

- ராமாநுஜரின் பெருமையைக் கேட்டறிந்து கொண்டால், உளமார உணர்ந்துகொண்டால் ராமாநுஜர் போன்ற ஒருவர், அதாவது ஸ்ரீராமாநுஜர் நமக்கு மிகவும் தேவை, முழுமையாகத் தேவை, அவர் ஒருவரே தேவை எனப்படிப்படியாக நிலைஉயர்வு பெறலாம்! இது

போன்ற ஒரு 'மஹான்' மட்டுமே ஒரு ஆத்மாவினுடைய தாகமாகவும், முழுஇலக்காகவும் இருக்க முடியும் என்றும், நாம் அவரைப்பற்றி அறிந்தவை அனைத்தும் அவர் பெருமைக்கடலின் சிலதுளிகள்தாம் என்றும் உணர்ந்துகொள்ளும்பொழுது நமக்கு ராமாநுஜரின் மீதுள்ள ஈடுபாடு வலிமைபெறும். இந்த ஆற்றல் பிறருக்கும் பரவும்.

- எல்லா அமைப்புகளிலும் அமைப்பு வேறுபாடுகள் கட்டாயம் இருக்கவே செய்யும். அவை வளரவளர, கருத்து வேறுபாடுகளும் உண்டாகும். என்றாலும் அவை பிளவுகளாக மாறி, அந்த அமைப்பின் ஒற்றுமையையும் பெருமையையும் குலைக்கவிடாமல் கருத்து வேறுபாடுகளை உரியமுறையில் அணுகவேண்டும். பிறர் வழியில் தலையிடாமையும் நம்மரபின்நலமும் பொதுநலமும் கருதி ஒற்றுமைபேணலும், இந்த அணுகுமுறைக்கு உயிர்நாடி போன்றவை.

- 'தென்கலை-வடகலை' என்ற பிரிவுகளில் கருத்து மற்றும் நடைமுறை வேறுபாடுகளிருந்தாலும், இருபிரிவினரும் ராமாநுஜரையே ஆசார்யராகக்கொண்டு, பெரும்பான்மை அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றுபட்டிருப்பவர்களே!

- 'பாஞ்சராத்ரம்-வைகாநஸம்' என்று எம்பெருமானை வழிபடுமுறைகள் (ஆகமங்கள்) இரண்டு. நம் ஆசார்யர்கள் இவ்விரண்டையுமே இருகண்களாகப் போற்றினர். பாஞ்சராத்ர வழிபாட்டு முறையைச் சார்ந்த ராமாநுஜர், வைகாநஸ முறையில் அமைந்திருந்த திருக்கோவில்களில் அம்முறையையே போற்றிவந்தார். பகவான் விகநஸர் எவ்வாறு வைகாநஸ ஆகமத்தைத் தன்மரபினற்கு அருளினாரோ, அதுபோன்றே, வைகாநஸர்களின் கொள்கையான விசிஷ்டாத்வைதத் தத்துவத்தை நிலைநாட்டியதால் ராமாநுஜர் வைகாநஸர்களின் மதிப்புக்கும் போற்றுதலுக்கும் உரியவரே.

- 'அந்தணர்-பிறர்' என்று இரண்டு பெரும் வகுப்புகளைச் சார்ந்தவர்களாய் அன்பர்கள் உள்ளனர். எம்பெருமான் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒவ்வொருவகையான பணியைப்பெற்று உகக்கிறான். பணிகள் வேறாயினும், எம்பெருமான் அடையும் உகப்பும் அடியார்களிடம் வைக்கும் அன்பும் ஒன்றே! எத்தனையோ எளிய குடியினரை எம்பெருமான் ஏற்றும் போற்றியும்

கொண்டாடியிருக்கிறான். குறும்பறுத்தவர்களாய் பண்பாளர்களையெல்லாம் வேறுபாடின்றி போற்றி வாழ்ந்த அந்தணப் பெருந்தகைகளான ஆசார்யர்கள் நம் முன்னோரிலே பலருண்டு. எனவே, இதில் உயர்வு தாழ்வுபேசி, பிளவு உண்டாக்குவது தவறு மட்டுமல்ல; பெருங்குற்றமுமாகும். உளமாரப் பணிசெய்வோர், மற்றோரை மதித்து வாழ்வோர் உயர்ந்தவர் என்றும் உளத்தூய்மையும் அடக்கமும் இல்லாதவர் தாழ்ந்தவர் என்றும் கொள்ளும் எம்பெருமான் தீர்ப்பைக்கருத்திற்கொண்டு, ஒன்றுபட்டு வாழவேண்டும்!

நாம் உயராவிட்டாலும் போட்டி, பகைமைகளால் நிலைதாழாதிருந்தாலே ராமாநுஜருடைய திருவுள்ளம் உகக்கும்! ராமாநுஜர் பெருமையை பாரறியச் செய்வதோடு, முதலில் நமக்குள் நல்லுறவை உண்டாக்கி முழுவலிமையையும் ஆற்றலையும் அடையவேண்டியது நம் உடனடித்தேவை!

இந்தப்பெருமாற்றங்கள் மட்டுமே, ராமாநுஜரின் ஆயிரமாவது ஆண்டு விழாவை பெரியவர்கள் நினைத்தபடி, எம்பெருமான் திருவுள்ளப்படி, ராமாநுஜர் திருவுள்ளம் குளிரும்படி உலகெல்லாம் நலம்பெற்று மகிழும்படி கொண்டாடச்செய்யும்.

## இணைப்புகள்

### ராமாநுஜரின் மற்றைய பெயர்கள்

உடையவர், எம்பெருமானார், இளையாழ்வார், லக்ஷ்மணமுனி, ஸ்ரீபாஷ்யகாரர், யதிராஜர், யதிபதி, யதீஸ்வரர், திருப்பாவை ஜீயர்.

### ராமாநுஜர் அருளிச் செய்த ஒன்பது நூல்கள்

1. **ஸ்ரீபாஷ்யம்** – வேதத்தின் அரும்பொருளைத் (உபநிடதங்கள்) திரட்டி சுருக்கமாக (சூத்திர வடிவில்) வியாசர் வழங்கிய 'பிரம்மசூத்திர'த்திற்கு ராமாநுஜர் அருளிய 'விரிவுரை'.

2. **வேதாந்த தீபம்**, 3. **வேதாந்த சாரம்** – ஸ்ரீபாஷ்யத்தின் பொருளை எளிமையாக உணர அருளப்பட்ட அடிப்படை விளக்க நூல்கள்.

4. **வேதார்த்த ஸங்க்ரஹம்** – மற்றைய மதாசார்யார்களைப்போல உபநிடதங்களுக்கு தனியாக விளக்கவுரை இயற்றாத ராமாநுஜர் அவற்றின் ஆழ்பொருளை விரித்துரைக்கும் வகையில் இந்த நூலை அருளிச்செய்தார்.

5. **கீதா பாஷ்யம்** – எம்பெருமான் சோதிவாய் திறந்து பொழிந்த கீதையமுதத்தை பொருளும் சுவையும் மாறாமல் அருளிய உட்பொருள் விளக்கம்.

6. **சரணாகதி கத்யம்,** 7. **ஸ்ரீரங்க கத்யம்** மற்றும் 8. **ஸ்ரீவைகுண்ட கத்யம்** (கத்யத்ரயம்) - சரணாகதி, திருவரங்கநகரப்பன் மற்றும் ஸ்ரீவைகுண்டநாதன் ஆகியோரின் பெருமைகளை வியத்தகு முறையிலே உயிரை உருக்கும் வகையிலே அருளிச்செய்த 'போற்றி நூல்'.

9. **நித்யக்ரந்தம்** - அன்றாடம் எம்பெருமானை வழிபடும் முறைகளை விளக்கும் அருள்நூல்.

**ராமாநுஜரைப் பற்றி...**

**தனியன்கள்**

யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ||

ந சேத் ராமாநுஜேத் யேஷா சதுரா சதுரக்ஷரீ |
காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்த மாத்ருச: ||

ராமாநுஜமுநிர் ஜீயாத் யோ ஹரேர் பக்தியந்த்ரத: |
கலிகோலாஹலக்ரீடா முதாக்ரஹமபாஹரத் ||

**இராமாநுச நூற்றந்தாதி**

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும், நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் எங்கள் இராமானுசனை அடைபவர்க்கே !

**உபதேசரத்தினமாலை**

இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த திருவாதிரைநாள்
என்றையிலும் இன்றிதனுக்கேற்றமென்தான்- என்றவர்க்குச்
சாற்றுகின்றேன் கேண்மின் எதிராசர் தம்பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள் !

ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாட்களினும்
வாழ்வான நாள்நமக்கு மண்ணுலகீர்- ஏழ்பாரும்
உய்ய எதிராசருதித்தருளும் சித்திரையில்
செய்ய திருவாதிரை !

எந்தை யெதிராசர் இவ்வுலகி லெந்தமக்கா
வந்துதித்தநாளென்னும் வாசியினால் – இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனை நெஞ்சே
ஒருவாமலெப்பொழுதும் ஓர் !

எம்பெருமானார் தரிசனமென்றே யிதற்கு
நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார் – அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயலறிகைக் கா !

<u>**ஆர்த்தி ப்ரபந்தம்**</u>

வாழியெதிராசன் ! வாழியெதிராசன் !
வாழியெதிராசன் ! என வாழ்த்துவார்– வாழியென
வாழ்த்துவார் வாழியென வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணோர் தலை !

இராமாநுசாயநமவென் றிரவும் பகலும் சிந்தித்து
இரா மாநுசர்களிருப்பிடந்தன்னில் இறைப்பொழுதும்
இரா மாநுசரவர்க் கெல்லாவடிமையுஞ் செய்யவெண்ணி
இரா மாநுசர் தம்மை மானுசரா வென்கொலெண்ணுவதே?

<u>**மங்கள ஸ்லோகம்**</u>

ஸ்ரீமந் மஹாபூதபுரே ஸ்ரீமத் கேஸவ யஜ்வந: |
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் ||

<u>**வாழித்திருநாமம்**</u>

சீராருமெதிராசர் திருவடிகள் வாழி !
திருவரையிற்சாத்திய செந்துவராடை வாழி !
ஏராரும் செய்யவடிவெப்பொழுதும் வாழி !
இலங்கிய முன்னூல்வாழி இணைத்தோள்கள் வாழி !
சோராத துய்யசெய்ய முகச்சோதி வாழி !
தூமுறுவல் வாழி ! துணைமலர்க்கண்கள் வாழி !
ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி !
இனிதிருப்போடு எழில் ஞானமுத்திரை வாழியே !

அறுசமயச் செடியதனை அடியறுத்தான் வாழியே !
அடர்ந்து வரும் குதிட்டிகளை அறத்துறந்தான் வாழியே !
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே !
தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே !
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே !
மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே !
அறமிகு நற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே !
அழகாருமெதிராசர் அடியிணைகள் வாழியே !

சங்கர பாற்கர யாதவ பாட்டப் பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுற வாதியர் மாய்குவர் என்று சதுமறை வாழ்ந்திடுநாள் !
வெங்கலி இங்கினி வீறு நமக்கிலை என்று மிகத்தளர் நாள் !
மேதினி நம் சுமை ஆறுமெனத் துயர்விட்டு விளங்கிய நாள் !
மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடு நாள் !
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றும் உவந்திடு நாள் !
செங்கயல் வாவிகள் சூழ் வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே !

## ராமானுஜர் நமக்கு அருளிய ஆறு கட்டளைகள்

இந்த ஆறிலும், ஒன்று செய்ய இயலவில்லையென்றால் அதற்கு அடுத்ததையாவது செய்யவேண்டும் என்று கருத்து.

1. ஸ்ரீபாஷ்யத்தை ப்ரவசனம் (பொருளை விரித்துரைத்து அதன் அறுதிப்பொருளை நிலைநாட்டுவது) செய்வது. (வியாசர் வேதத்தின் இறுதிப்பகுதியாகிய உபநிடதங்களின் (வேதாந்தம்) அரும்பொருளைச் சுருக்கி 'பிரம்மசூத்திர' வடிவில் செய்தார். அதற்கு ராமாநுஜர் அருளிய உயரிய விளக்கமே 'ஸ்ரீபாஷ்யம்' எனப்படுவது. பிரம்ம சூத்திரத்திற்கு எழுந்த பல்வேறு உரைகளில் சிறந்த மெய்யான உரை என சரஸ்வதி தேவியே கொண்டாடி ராமாநுஜர் உரைக்கு 'ஸ்ரீபாஷ்யம்' என்ற சிறப்புப்பெயரை அருளிச்செய்தாள்).

2. (ஆழ்வார்கள் அருளிய) திவ்யப்ரபந்தத்தின் பெருமையை எல்லோருக்கும் தெரியச்செய்வது.

3. திவ்யதேசங்களில் (விரிவான பட்டியலை பின் இணைப்பில் காண்க) எப்பொழுதும் கைங்கர்யம் செய்வது.

4. திருநாராயணபுரத்தில் (மைசூர் மாண்டியா அருகில் உள்ள மேல்கோட்டை. தனக்கு எதிரிகளால் ஆபத்து நேரிட்டபோது ராமாநுஜர் பன்னிரண்டு ஆண்டுகள் மேல்கோட்டையில்தான் தங்கியிருந்தார்.) ஒரு குடிசையாவது கட்டிக்கொண்டு வாழ்வது.

5. த்வயத்தை (இது வேதத்தின் திரண்ட பொருளான சரணாகதியை உள்ளடக்கியது. இதை குருவிடமிருந்தே முறைப்படிப் பெறவேண்டும்) பொருளோடு எப்பொழுதும் ஓதிக்கொண்டேயிருப்பது.

6. ஒரு நல்ல அடியாருடைய அன்பிலே (பாகவதனுடைய அபிமானத்திலே) ஒதுங்கி எப்போதும் வாழ்வது.

## ராமாநுஜர் தடை செய்தருளிய

## ஆறு (செய்யத்தகாத) செயல்கள்

1. எம்பெருமானுடைய அர்ச்சைத் திருமேனியைக் (திருக்கோவில்களில் உள்ள மூர்த்திகளை) கல், மண், மரம் போன்ற பொருள்களாக நினைப்பது

2. ஆசார்யனை மனிதனென்று நினைப்பது

3. வைஷ்ணவனின் ஜாதியை ஆராய்வது

4. கலியுகத்தின் கேட்டை ஒழிக்கக்கூடிய பகவத்பாகவதர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை (திருவடி விளக்கிய நீர்) வெறும்நீரென்று நினைப்பது

5. எல்லாக் குறைகளையும் அழிக்கக்கூடிய பகவத்பாகவதர்களின் திருநாமங்களையும், மந்த்ரங்களையும் வெறும் ஒலிகளாக (ஸப்தங்களாக) எண்ணுவது

6. ஸர்வேஸ்வரனான ஸ்ரீய:பதியை (திருமாலை) மற்ற தெய்வங்களோடு ஒத்தவன் என்று எண்ணுவது

மேற்கூறிய எண்ணங்களையுடையவர்களுக்கு கீழ்நிலையே வாய்க்கும்.

- பாகவதர்களைப் (அடியார்களை) போற்றுவது பகவானைப் போற்றுவதைக் காட்டிலும் சிறந்தது.
- ஸ்ரீவைஷ்ணவர்களை அவமதிப்பது எம்பெருமானை அவமதிப்பதைக் காட்டிலும் கொடியது.
- எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைக் காட்டிலும் பாகவதர்களுடைய ஸ்ரீபாததீர்த்தம் சிறந்தது.

ஆகையால் எப்போதுமே பாகவதர்களை வணங்குவதில் சோம்பல் இல்லாதவனாய் இருப்பாயாக!

## ராமானுஜர் அருளிய வார்த்தைகள்

பெரும்புகழாளராய் கருணைக் கடலான எதிராஜர் எல்லா சாஸ்திரங்களின் சாரமாக எழுபத்து இரண்டு நல்வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து சிஷ்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு பெருங்கொடையாக வழங்கினார். அவை பின் வருமாறு:

1. ஒரு வைணவன் தன்னுடைய ஆசார்யன் பணியிலும் பிற அடியார்களுடைய தொண்டிலும் ஒரே மதிப்புடன் செயல்பட வேண்டும்.

2. நம் முன்னோர் அருளிய மொழிகளில் மிகுந்த நம்பிக்கையோடு இருக்க வேண்டும்.

3. ஒருபோதும் புலன்களின் வழிகளில் அலைந்து கெட்டுப்போகலாகாது. புலன்களை அடக்கி எம்பெருமான் மீது ஈடுபட்டவனாயிருக்க வேண்டும்.

4. வீண் பொழுதுபோக்கும் வெற்றறிவும் விளையாடும் நூல்களில் (சாமான்ய சாஸ்திரங்களில்) உள்ளம் செலுத்தக்கூடாது.

5. எம்பெருமானுடைய பெருமையையும் லீலைகளையும் அறிவிக்கும் நூல்களிலேயே பொழுதைப்போக்கி வாழவேண்டும்.

6. ஆசார்யனின் திருவருளால் அறிவுக்கடலை அடைந்த பின், அறிவிழந்து, தாழ்ந்த பொருள்களில் மயங்கலாகாது.

7. எம்பெருமான் தொடர்பற்ற எல்லாவற்றையும் அவை அனைத்தும் விலக்கத்தக்கவை என்னும் கருத்தால் ஒன்றாகவே எண்ணவேண்டும்.

8. புஷ்பம், சந்தனம், தாம்பூலம் முதலான நல்ல பொருள்களைக்கூட எம்பெருமான் உகப்பிற்காக அல்லது எம்பெருமான் உகந்து ஏற்று அருளியது என்ற தகுதியற்று இருந்தால், அவற்றை விலக்கவே வேண்டும்.

9. எம்பெருமானுடைய திருநாமஸங்கீர்த்தனத்தில் உங்களுக்கு எத்தனை விருப்பமுள்ளதோ, அத்தனை விருப்பம் அவனடியார்களுடைய திருநாமஸங்கீர்த்தனத்திலும் இருக்க வேண்டும்.

10. உயர்ந்த அடியார்களை அண்டியிருப்பது எம்பெருமானை எளிதில் அடைவதற்கு வழிவகுக்கும் என்பதை அறிந்து, எப்போதும் அவர்களின் ஆணைப்படி உறுதியாய் நடக்க வேண்டும்.

11. பகவானுக்கும், பாகவதர்களுக்கும் பணிவிடை செய்யாமல் உலகியல் உணர்வுகளில் ஆசை முதலானவற்றால் தூண்டப் பெற்றவனாய் ஒரு மனிதன் வாழ்ந்தானாகில், அவன் எத்தனை அறிவாளியாய் இருந்தாலும் அழிந்து விடுவான்.

12. வைணவர்கள் தன்னுடைய எந்தச்செயலையும் சேவையையும் பயன்கருதிச் செய்யமால் அவற்றைச்செய்வதே பெரும்பயன் என்ற உகப்புடன் செய்துகொண்டேயிருக்க வேண்டும்.

13. அடியார்களை நீ, போ, வா என ஒருமையில் அழைக்கலாகாது.

14. வைஷ்ணவர்களைக் கண்டவுடனேயே முதலில் கைகூப்பி தொழுதிடல் வேண்டும்.

15. எம்பெருமான் முன்னிலையிலும், குற்றமற்றவர்களான வைஷ்ணவர்கள் முன்னிலையிலும் ஒருபொழுதும் காலை நீட்டிக் கொண்டு இருக்கலாகாது.

16. எம்பெருமான், ஆசார்யன், வைஷ்ணவன் ஆகியவர்களுடைய இருப்பிடத்தை நோக்கிக் காலை நீட்டிக்கொண்டு ஒருபோதும் தூங்கக்கூடாது.

17. தூங்கி எழுந்தவுடன் நம் ஆசார்ய மரபில் வந்த பெரியோர்களின் பெயரையும் பெருமையையும் போற்ற வேண்டும் (குருபரம்பரையை அநுசந்திக்க வேண்டும்).

18. அடியார் பெருமக்களைக்கண்டவுடன் திருமந்திரத்தை (நாராயணனின் எட்டெழுத்து மந்திரத்தை) சொல்லிக்கொண்டே அவர் முன் தண்டம் (தடி) போல் விழுந்து வணங்கவேண்டும்.

19. பகவான் அல்லது பாகவதர்களுடைய திருநாம சங்கீர்த்தனத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் செய்துகொண்டிருக்கும்போது இயன்ற வரையில் அவர்களைப் போற்றாமல், நடுவில் எழுந்து போவது பெருங்குற்றமாகும்.

20. வைஷ்ணவர்கள் எழுந்தருள்வதைக் கேட்டால் அப்போது உடனே எதிர்கொண்டு அழைக்க வேண்டும்.

21. அவ்வண்ணமே அவர்கள் விடை கொள்ளும்போது பக்தியோடு சிறிது தூரம் கூடச்செல்ல வேண்டும். இவ்விரண்டும் செய்யாவிடில் பெருத்த குறை உண்டாகும்.

22. தங்களுடைய ஆன்ம நலனைக்கருத்திற்கொண்டு பெரியோர்களைப் பணிந்து பின்பற்றாமல், வயிற்றுப் பிழைப்பிற்காக இழிந்தவர்களை அண்டிக்கிடப்பது ஒரு வைணவனின் தன்மைக்கு மிகவும் கேடு விளைவிக்கும்.

23. எம்பெருமானின் கோவில் கோபுரங்களையும், விமானங்களையும் கண்டவுடனேயே கைகூப்பித் தொழுதுவிடவேண்டும்.

24. மற்ற தெய்வங்களினுடைய விமானங்களைப் பார்த்தோ கலைநுட்பம் போன்றவற்றின் கவர்ச்சியாலோ வியப்படையக் கூடாது.

25. எம்பெருமானைத் தவிர வேறு தெய்வங்களின் பாடல் இசைகளைக்கேட்டு வியப்படையவோ மகிழவோ கூடாது.

26. எம்பெருமான் மற்றும் அடியார்களுடைய பெருமைகளைப் பாடும் நல்லோரைப் பார்த்து மகிழ்ச்சியும் நெகிழ்ச்சியும் அடையாமல் அவர்கள் நடுவில் கடனே என்றிருப்பது குற்றமாகும்.

27. ஸ்ரீவைஷ்ணவர்கள் எவருடைய திருமேனி நிழலையும் தாண்டக்கூடாது.

28. தன் உடம்பின் நிழல் ஸ்ரீவைஷ்ணவர்கள் மேல் படும்படி இருக்கலாகாது.

29. தூய்மைப்படுத்தும் பொருள்களை முதலில் தொட்டுத் தங்களைத் தகுதியுள்ளவர்களாக்கிக் கொண்டபின்தான் வைஷ்ணவர்களைத் தொடவேண்டும்.

30. 'ஏழை' என்று ஒரு அடியவனைப் பொருட்படுத்தாமலும் தாழ்த்தியும் விலக்கியும் செய்யும் செயல்கள் பாபமாகும்.

31. "அடியேன்" என்று வணங்கும் ஒரு வைணவனைப் பொருட்படுத்தாமல் கவனக்குறைவோடு இருத்தலும் குற்றமேயாகும்.

32. அடியார்களுடைய பிறப்பில் தாழ்வையும், தூக்கம், சோம்பல் முதலானவற்றையும் பார்த்து, அவற்றை வேண்டுமென்றே பிறருக்கு வெளிப்படுத்தி ஒருபோதும் குறை சொல்லலாகாது.

33. அடியார்களுடைய குறைகளை ஆய்வதை விட்டுவிட்டு அவர்கள் நிறைகளையே வெளிப்படுத்த வேண்டும்.

34. எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தம், பக்தர்களுடைய ஸ்ரீபாததீர்த்தம் ஆகிய உயர்ந்த ஸ்ரீபாததீர்த்தங்களை எம்பெருமான் தொடர்பறியாத மனிதர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போது பருகலாகாது.

35. ஆன்மா, உலகம், இறைவன் (சித், அசித், ஈஸ்வரன்) என்னும் தத்துவங்கள் மூன்று மற்றும் ரகசியங்கள் மூன்று (திருமந்தரம், த்வயம், சரமஸ்லோகம். இவை ஒரு குருவின் வாயிலாக வைணவராகும்பொழுது அவராலேயே நமக்கு அருளப்படுபவை) ஆகியவற்றின் அறிவும் தெளிவும் இல்லாதவனுடைய பாதநீரை ஒருபோதும் பருகலாகாது.

36. அறிவு, ஒழுங்கு மற்றும் நல்லொழுக்கம் உடையவனான வைஷ்ணவனுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை முயன்று பெற்றுப்பருகவேணும்.

37. தம்மைப் பிற அடியார்களுக்கு இணையாக எண்ணலாகாது.

38. எம்பெருமானைப்பற்றிய அறிவற்றவர்களைத் (ப்ராக்ருதர்கள்) தெரியாமல் தொட நேரிட்டால், உடுத்திய துணியோடு நீராடிவிட்டு உடனே

வைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைப்பருக வேண்டும்.

39. தெளிந்த அறிவு, உண்மை பக்தி மற்றும் மாறாத உள்ள உறுதியுடைய வைணவப்பெரியோர்களை, எம்பெருமானுடைய மிகவுயர்ந்த திருமேனிகளாக எண்ணி, அவர்களிடம் சிறப்பாக நம்பிக்கை வைக்க வேண்டும்.

40. அத்தகைய பெரியவர்களிடத்தில் அன்பைப் பெருக்கிக் கொண்டேயிருக்கவேண்டும்.

41. எம்பெருமானிடம் முறையான முழுமையான ஈடுபாடு இல்லாதவர்கள் வீட்டில் எம்பெருமானுடைய தீர்த்தத்தையும் பெறக்கூடாது.

42. அவர்களுடைய வீட்டிலுள்ள எம்பெருமானையும் வணங்கலாகாது.

43. எம்பெருமானுடைய திருக்கோவில்களிலும் கூட ப்ராக்ருதர்கள் (எம்பெருமானை உணராத எளியவர்கள்) பார்த்துக் கொண்டிருக்கும்போது தீர்த்தப்பிரசாதங்களை எடுத்துக்கொள்ளக் கூடாது.

44. எம்பெருமான் அமுதுசெய்த மற்றும் வைஷ்ணவர்களால் அளிக்கப்பட்ட அருளுணவை, "உண்ணா நோன்பு" போன்ற சூழ்நிலைகளைச் சொல்லி மறுக்கலாகாது.

45. மிகத்தூய்மையானதும் வினையாவையும் போக்கக்கூடியதுமான எம்பெருமான் அமுதுசெய்த அருளுணவை (ப்ரஸாதத்தை) – 'உண்டு மிகுந்த எச்சில்' என்று எண்ணக்கூடாது.

46. வைஷ்ணவர்கள் திருமுன்பே ஒருபோதும் தன்னைப்புகழ்ந்து கொள்ளலாகாது.

47. வைஷ்ணவர்கள் திருமுன்பே ஒரு எளிய மனிதனைக்கூடத் தாழ்த்தலாகாது.

48. பெரியவர்களான பாகவதர்களுடைய பண்புகளில் ஈடுபடுதல் மற்றும் அவர் பணியின்றி ஒரு நொடிப்பொழுதும் கூட வேறு எந்தச்செயலிலும் ஈடுபடலாகாது.

49. தினந்தோறும் ஒரு நாழிகைப் போதாவது தன் ஆசார்யனுடைய நற்பண்புகளைப் புகழவேண்டும்.

50. தினந்தோறும் ஒரு நாழிகைப் போதாவது நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களையாவது, ஆசார்யர்களுடைய திருமொழிகளையாவது ஓதி உணர்ந்து மகிழ வேண்டும்.

51. தன் உடலையே உயிர் என்றும் அதைப் பேணி வளர்ப்பதே பிறவிப்பயன் என்றும் நினைப்பவர்களோடு உறவு கொள்ளவே கூடாது.

52. வைஷ்ணவர்களுடைய அடையாளங்களைத் தாங்கிக்கொண்ருந்தாலும் உலகியல் மயக்கங்களில் உழன்று கொண்டிருக்கும் கயவர்கள் உறவையும் விலக்க வேண்டும்.

53. எப்போதும் பிறரைத் தூற்றுவதிலேயே ஈடுபட்டிருப்பவர்களோடு பேசவேகூடாது.

54. மற்ற தெய்வங்களின் பக்தர்களோடு தவிர்க்க முடியாமல் ஏற்படும் தொடர்பினால் விளையும் கேட்டை நீக்கிக்கொள்ள, பெரியவர்களான அடியார்களோடு எப்போதும் பேச்சை வைத்துக்கொள்ள வேண்டும்.

55. மனிதர்களில் தாழ்ந்தவர்களான அடியார்களைத் தூற்றும் அற்பர்களைக் கண்ணாலும் பார்க்கக்கூடாது. அதைப்போல ஆசார்யர்களைத் தூற்றும் கொடியவர்களையும் காணவே கூடாது.

56. மந்திரங்களில் ரத்னமாயிருக்கும் 'த்வயத்தின்' பொருட்சுவையிலும் பெருமைகளிலுமே திளைத்திருப்பவர்களோடு எப்போதும் சேர்ந்திருக்க வேண்டும்.

57. எம்பெருமானைத் தவிர்த்த பிற பொருள், வழி மற்றும் பயன்களில் நாட்டம் கொண்டவர்களை விலக்கி வாழ வேண்டும்.

58. எம்பெருமான் ஒருவனையே புகலடைந்து ஸரணாகதி தர்மத்தில் எப்போதும் ஊன்றி நிற்பவர்களோடு, அவர்களை எப்பொழுதும் பிரியாமல் கூடிவாழ வேண்டும்.

59. தேறிய அறிவு உடையவர்களாய் நமக்கும் நல்லறிவை ஊட்டுகின்ற மஹாபாகவதர்களோடு கூடிவாழ வேண்டும்.

60. பொருள், இன்பம் என்னும் இந்த இரண்டையே வாழ்க்கையாகக் கருதி நடமாடுவோரின் உறவு நமக்குக் கூடவே கூடாது.

61. எம்பெருமானிடம் பக்தியுள்ளவர்களிடமே எப்போதும் பேச்சும் உறவும் வைத்துக் கொள்ள வேண்டும்.

62. ஒரு வைஷ்ணவன் உங்களைக்குறை சொன்னாலோ விலக்கினாலோ "அவன் நமக்குத் தீங்கு இழைத்துவிட்டான்" என்று எண்ணாமல், அமைதிகாத்து எம்பெருமான் திருவடிகளிலேயே நினைவு செலுத்தவேண்டும்.

63. எல்லா அடியார்களுக்கும் நல்லதையே எப்போதும் செய்ய வேண்டும்.

64. தர்மத்துக்குப் புறம்பான செயலை, அதனால் எத்தனை நன்மை உண்டானாலும் அறிவாளியானவன் செய்யலாகாது.

65. எம்பெருமானுக்கு அமுது செய்யப்படாத உணவை ஒருபோதும் உண்ணலாகாது. மலர்கள், சந்தனம், தாம்பூலம், ஆடைகள், நீர், பழம் முதலானவற்றைக்கூட எம்பெருமானுக்கு படைக்காமல் நாம் ஒருபோதும் பயன்படுத்தக்கூடாது.

66. நாம் வேண்டாமலே கிடைத்தாலும், தகாத வழிகளில் வரும் பொருளை ஒருபோதும் நாம் ஏற்கலாகாது.

67. இயற்கையிலேயே தள்ளப்பட்டதும் (புலால், வெங்காயம், பூண்டு, முருங்கை போன்றவை), இருக்குமிடம் மற்றும் சூழ்நிலைகளால் குறைவுபட்டதுமான உணவு வகைகளை ஒருபோதும் ஏற்கக்கூடாது. பெரியோர்கள் கடைப்பிடித்த உணவுஒழுக்கத்தைத் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும்.

68. தனக்கு இனியதாய் இருக்கும் பொருள்களை, நெறிமுறைகளை மீறி எம்பெருமானுக்குப்படைக்கலாகாது. சாஸ்திரங்களில் நல்லவகையாகக் கூறப்பட்டுள்ள மேன்மையான எல்லாவற்றையும் இயன்றவரையில் எம்பெருமானுக்கு சமர்ப்பிக்க வேண்டும்.

69. நறுமணமிக்க சுவையான உணவு, பானம் மற்றும் பணியார வகைகள் இவை எம்பெருமான் அமுது செய்தருளியது என்று எண்ணம் வைக்கவேண்டுமேயொழிய, 'தனக்கு இனியவை' என்னும் எண்ணத்தோடு ஒருபோதும் உண்ணலாகாது.

70. பெரியோர்களால் கடைபிடிக்கப்பட்டு வரும், சாஸ்திரங்களில் கூறப்பட்ட கடமைகள் அனைத்தையும் இவை எம்பெருமானுக்கு நாம் செய்யும் தொண்டு என்ற எண்ணத்தில் தான் செய்யவேண்டுமே தவிர அவற்றின் நன்மை பெருமைகளைக் கருதிச் செய்யலாகாது.

71. மெய்ப்பொருள் அறிந்த நல்லோர்களான அடியார்களுக்குக் குற்றமிழைப்பதைக் காட்டிலும் கேடு தருவது வேறொன்றுமில்லை; அவர்களுடைய முகம் மலரும்படிச் செய்வதைக் காட்டிலும் நன்மை தருவது வேறொன்றுமில்லை.

72. அடியார்களைப் போற்றிவாழ்வதைக்காட்டிலும் வேறொரு மேலான பேறோ பயனோ கிடையாது. அவர்களைத் தூற்றுவதைக் காட்டிலும் நமக்கு அழிவுதரக்கூடியது வேறொன்றில்லை.

## 108 திவ்யதேசங்கள்

### தமிழகம்

| | | |
|---|---|---|
| 1. | திருவரங்கம் | திருச்சி |
| 2. | திருக்கோழி – உறையூர் | திருச்சி |
| 3. | தஞ்சைமாமணிக்கோயில் | தஞ்சை |
| 4. | அன்பில் (சுந்தரராஜப்பெருமாள்) | திருச்சி |
| 5. | உத்தமர் கோயில் | திருச்சி |
| 6. | திருவெள்ளறை | திருச்சி |
| 7. | கோயிலடி | திருச்சி |
| 8. | புள்ளம்பூதங்குடி | கும்பகோணம் |
| 9. | ஆதனூர் (ஆண்டளக்கும் ஐயன்) | கும்பகோணம் |
| 10. | திருச்சேறை (சாரநாதப்பொருமாள்) | கும்பகோணம் |
| 11. | திருக்குடந்தை (சார்ங்கபாணி) – கும்பகோணம் | கும்பகோணம் |
| 12. | திருவிண்ணகரம் (ஒப்பிலியப்பன்) | கும்பகோணம் |
| 13. | நாச்சியார்கோயில் | கும்பகோணம் |
| 14. | நந்திபுர விண்ணகரம் (நாதன் கோயில்) | கும்பகோணம் |
| 15. | திருக்கூடலூர் (கூடலூர் – ஆடுதுறை) | கும்பகோணம் |
| 16. | திருக்கண்ணமங்கை | கும்பகோணம் |
| 17. | கபிஸ்தலம் | கும்பகோணம் |
| 18. | திருவெள்ளியங்குடி | கும்பகோணம் |
| 19. | தேரழுந்தூர் (ஆமருவியப்பன் கோயில்) | குத்தாலம் |
| 20. | திருக்கண்டியூர் | தஞ்சை |
| 21. | திருநாகை (நாகப்பட்டினம்) | நாகப்பட்டினம் |
| 22. | திருஇந்தளூர் (பரிமளரங்கநாதர்) | மாயவரம் |
| 23. | திருச்சித்ரகூடம் (தில்லை) | சிதம்பரம் |
| 24. | சிறுபுலியூர் | சீர்காழி |
| 25. | தலைச்சங்க நாண்மதியம் (தலைச்சங்காடு) | சீர்காழி |
| 26. | திருக்கண்ணபுரம் | சீர்காழி |

| | | |
|---|---|---|
| 27. | திருவாலி, திருநகரி | சீர்காழி |
| 28. | திருக்காழிச்சீராம விண்ணகரம் (சீர்காழி) | சீர்காழி |
| 29. | திருக்கண்ணங்குடி | சீர்காழி |
| 30. | திருமணிமாடக்கோயில் (நாங்கூர்) | சீர்காழி |
| 31. | வைகுந்த விண்ணகரம் (நாங்கூர்) | சீர்காழி |
| 32. | அரிமேய விண்ணகரம் (நாங்கூர்) | சீர்காழி |
| 33. | திருத்தேவனார்தொகை (நாங்கூர்) | சீர்காழி |
| 34. | வண்புருடோத்தமம் (நாங்கூர்) | சீர்காழி |
| 35. | செம்பொன் செய்கோயில் (நாங்கூர்) | சீர்காழி |
| 36. | திருத்தெற்றியம்பலம் (நாங்கூர்) | சீர்காழி |
| 37. | திருமணிக்கூடம் (நாங்கூர்) | சீர்காழி |
| 38. | திருக்காவளம்பாடி (நாங்கூர்) | சீர்காழி |
| 39. | திருப்பார்த்தன்பள்ளி (நாங்கூர்) | சீர்காழி |
| 40. | திருவெள்ளக்குளம் | சீர்காழி |
| 41. | திருமாலிருஞ்சோலை (கள்ளழகர்) | மதுரை |
| 42. | திருத்தண்கால் | மதுரை |
| 43. | திருமோகூர் | மதுரை |
| 44. | திருக்கூடல் (கூடலழகர்) | மதுரை |
| 45. | ஸ்ரீவில்லிபுத்தூர் | மதுரை |
| 46. | திருக்கோஷ்டியூர் | புதுக்கோட்டை |
| 47. | திருமெய்யம் | புதுக்கோட்டை |
| 48. | திருப்புல்லாணி | இராமநாதபுரம் |
| 49. | ஆழ்வார்திருநகரி (ஆதிநாதர்) - திருக்குருகூர் | நெல்லை |
| 50. | தொலைவில்லிமங்கலம் (இரட்டைத் திருப்பதி | நெல்லை |
| 51. | வானமாமலை | நெல்லை |
| 52. | திருப்புளிங்குடி (நவதிருப்பதி) | நெல்லை |
| 53. | திருப்பேரை (நவதிருப்பதி) | நெல்லை |
| 54. | ஸ்ரீவைகுண்டம் (நவதிருப்பதி) | நெல்லை |
| 55. | திருவரகுணமங்கை - நத்தம் (நவதிருப்பதி) | நெல்லை |

| | | |
|---|---|---|
| 56. | திருக்குளந்தை (நவதிருப்பதி | நெல்லை |
| 57. | திருக்குறுங்குடி | நெல்லை |
| 58. | திருக்கோளூர் (நவதிருப்பதி | நெல்லை |
| 59. | திருவண்பரிசாரம் (திருப்பதிசாரம்) | கன்னியாகுமரி |
| 60. | திருவாட்டாறு | கன்னியாகுமரி |
| 61. | திருவயிந்திரபுரம் | கடலூர் |
| 62. | திருக்கோவலூர் | கடலூர் |
| 63. | திருக்கச்சி | காஞ்சி |
| 64. | அட்டபுயகரம் | காஞ்சி |
| 65. | திருத்தண்கா (தூப்புல்) | காஞ்சி |
| 66. | திருவேளுக்கை | காஞ்சி |
| 67. | திருப்பாடகம் | காஞ்சி |
| 68. | திருநீரகம் | காஞ்சி |
| 69. | நிலாத்திங்கள்துண்டத்தான் | காஞ்சி |
| 70. | திருஊரகம் | காஞ்சி |
| 71. | திருவெஃகா | காஞ்சி |
| 72. | திருக்காரகம் | காஞ்சி |
| 73. | திருக்கார்வானம் | காஞ்சி |
| 74. | திருக்கள்வனூர் | காஞ்சி |
| 75. | திருப்பவளவண்ணர் | காஞ்சி |
| 76. | திருப்பரமேச்சுர விண்ணகரம் | காஞ்சி |
| 77. | திருப்புட்குழி | காஞ்சி |
| 78. | திருநின்றவூர் | சென்னை |
| 79. | திரு எவ்வுள் (திருவள்ளூர்) | சென்னை |
| 80. | திருநீர்மலை | சென்னை |
| 81. | திருவிடவெந்தை | சென்னை |
| 82. | திருக்கடல்மல்லை | சென்னை |
| 83. | திருவல்லிக்கேணி | சென்னை |
| 84. | திருக்கடிகை (சோளிங்கர்) | சென்னை |

## கேரளம்

| | | |
|---|---|---|
| 85. | திருவனந்தபுரம் (பத்மநாபஸ்வாமி) | கோவளம் |
| 86. | திருக்காட்கரை | கோட்டயம் |
| 87. | திருமூழிக்களம் | கோட்டயம் |
| 88. | திருப்புலியூர் | கோட்டயம் |
| 89. | திருச்செங்குன்றூர் | கோட்டயம் |
| 90. | திருவல்லவாழ் | கோட்டயம் |
| 91. | திருவண்வண்டூர் | கோட்டயம் |
| 92. | திருக்கடித்தானம் | கோட்டயம் |
| 93. | திருவாறன்விளை | கோட்டயம் |
| 94. | திருநாவாய் | திருச்சூர் |
| 95. | திருவித்துவக்கோடு | திருச்சூர் |

## ஆந்திரம்

| | | |
|---|---|---|
| 96. | திருவேங்கடம் | ஆந்திரம் |
| 97. | அஹோபிலம் (சிங்கவேள்குன்றம்) | ஆந்திரம் |

## வடநாடு

| | | |
|---|---|---|
| 98. | திருவயோத்தி | உத்தரப்ரதேஷ் |
| 99. | நைமிசாரண்யம் | உத்தரப்ரதேஷ் |
| 100. | வதரிகாச்ரமம் | உத்தரகண்டம் |
| 101. | தேவப்ரயாகை | உத்தரகண்டம் |
| 102. | திருப்பிரிதி | உத்தரகண்டம் |
| 103. | திருத்துவாரகை | குஜராத் |
| 104. | வடமதுரை | உத்தரப்ரதேஷ் |
| 105. | ஆயர்பாடி | உத்தரப்ரதேஷ் |

## வெளிநாடு

| | | |
|---|---|---|
| 106. | முக்திநாத் | நேபாளம் |

## வெளியுலகம்

| | | |
|---|---|---|
| 107. | திருப்பாற்கடல் | |
| 108. | பரமபதம் | |

## ஆழ்வார்கள், ஆசார்யர்கள் / திவ்யக்ஷேத்ரங்கள்

| **ஆழ்வார்கள்** | **பிறந்த திவ்யக்ஷேத்ரம்** |
|---|---|
| பொய்கையாழ்வார் | காஞ்சிபுரம் |
| பூதத்தாழ்வார் | திருக்கடல்மல்லை (மகாபலிபுரம்) |
| பேயாழ்வார் | திருமயிலை (மயிலாப்பூர்-சென்னை) |
| திருமழிசையாழ்வார் | திருமழிசை (சென்னை) |
| நம்மாழ்வார் | திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) |
| மதுரகவியாழ்வார் | திருக்கோளூர் (நெல்லை) |
| குலசேகராழ்வார் | திருவஞ்சிக்களம் (கேரளம்) |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | மண்டங்குடி (கும்பகோணம்) |
| பெரியாழ்வார் | ஸ்ரீவில்லிபுத்தூர் |
| ஆண்டாள் | ஸ்ரீவில்லிபுத்தூர் |
| திருப்பாணாழ்வார் | உறையூர் (திருச்சி) |
| திருமங்கையாழ்வார் | திருக்குறையலூர் (சீர்காழி) |
| **ஆசார்யர்கள்** | **பிறந்த திவ்யக்ஷேத்ரம்** |
| நாதமுனிகள் | காட்டுமன்னார்கோயில் (சிதம்பரம்) |
| உய்யக்கொண்டார் | திருவெள்ளறை (ஸ்ரீரங்கம்) |
| மணக்கால் நம்பி | மணக்கால் (ஸ்ரீரங்கம்) |
| ஆளவந்தார் | காட்டுமன்னார்கோயில் (சிதம்பரம்) |
| திருக்கோஷ்டியூர் நம்பி | திருக்கோஷ்டியூர் |
| பெரிய நம்பி | ஸ்ரீரங்கம் |
| பெரியதிருமலை நம்பி | திருமலை (திருவேங்கடம்) |
| திருவரங்கப்பெருமாள்அரையர் | ஸ்ரீரங்கம் |
| திருமாலையாண்டான் | திருமாலிருஞ்சோலை |
| திருக்கச்சிநம்பிகள் | பூவிருந்தவல்லி (சென்னை) |
| இராமாநுசமுனி | ஸ்ரீபெரும்பூதூர் |
| கூரத்தாழ்வான் | கூரம் (காஞ்சிபுரம்) |

| | |
|---|---|
| முதலியாண்டான் | புருஷமங்கலம் (சென்னை) |
| எம்பார் | மதுரமங்கலம் |
| பராசரபட்டர் | ஸ்ரீரங்கம் |
| நஞ்சீயர் | மேல்கோட்டை (மாண்டியா, கர்நாடகா) |
| நம்பிள்ளை | நம்பூர் |
| வடக்குத்திருவீதிப்பிள்ளை | ஸ்ரீரங்கம் |
| பெரியவாச்சான் பிள்ளை | செங்கண்ணலூர் (கும்பகோணம்) |
| பிள்ளைலோகாசார்யர் | ஸ்ரீரங்கம் |
| வேதாந்த தேசிகர் | திருத்தண்கா – தூப்புல் (காஞ்சி) |
| கூரகுலோத்துமதாசர் | ஸ்ரீரங்கம் |
| திருவாய்மொழிப்பிள்ளை | குந்தி நகரம் (நெல்லை) |
| மணவாளமாமுனிகள் | ஆழ்வார் திருநகரி (நெல்லை) |

## ராமாநுஜர் நியமித்தருளிய 74 ஸிம்ஹாஸநாதிபதிகள்

1. ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி, அவர் குமாரர் என்னாச்சப்பன், அவர் குமாரர் பிள்ளையப்பன்
2. பெரிய நம்பி குமாரர் புண்டரீகாக்ஷர்
3. திருக்கோட்டியூர் நம்பிகுமாரர் தெற்காழ்வான்
4. திருமாலையாண்டான் குமாரர் சுந்தரத் தோளுடையார்
5. பெரிய திருமலை நம்பி குமாரர் கந்தாடையாண்டான்
6. கூரத்தாழ்வான் குமாரர்கள் பட்டர், சீராமப்பிள்ளை
7. முதலியாண்டான் குமாரர் கந்தாடையாண்டான்
8. நடுவிலாழ்வான்
9. கோமடத்தாழ்வான்
10. திருக்கோவலூராழ்வான்
11. திருமோகூராழ்வான்
12. பிள்ளைப்பிள்ளையாழ்வான்

13. நடாதூராழ்வான்
14. எங்களாழ்வான்
15. அநந்தாழ்வான்
16. மிளகாழ்வான்
17. நெய்யுண்டாழ்வான்
18. சேட்டலூர்ச்சிறியாழ்வான்
19. வேதாந்தியாழ்வான்
20. கோயில் ஆழ்வான்
21. உக்கலாழ்வான்
22. அரணபுரத்தாழ்வான்
23. எம்பார்
24. கிடாம்பியாச்சான்
25. கணியனூர் சிறியாச்சான்
26. ஈச்சம்பாடியாச்சான்
27. கொங்கிலாச்சான்
28. ஈச்சம்பாடி ஜீயர்
29. திருமலை நல்லான்
30. சட்டம்பள்ளி ஜீயர்
31. திருவெள்ளறை ஜீயர்
32. ஆட்கொண்டவில்லி ஜீயர்
33. திருநகரிப் பிள்ளை
34. காராஞ்சி ஸோமயாஜியார்
35. அலங்கார வேங்கடவர்
36. நம்பி கருந்தேவர்
37. சிறுப்பள்ளி தேவராஜ பட்டர்
38. பிள்ளையுறைந்தையுடையார்

39. திருக்குருகைப்பிரான்பிள்ளான்

40. பெரியகோயில் வள்ளலார்

41. ஆசூரிப் பெருமாள்

42. திருக்கண்ணபுரத்தாச்சான்

43. முனிப்பெருமாள்

44. அம்மங்கிப் பெருமாள்

45. மாருதியாண்டான்

46. மாறொன்றில்லாமாருதியாண்டான்

47. ஸோமாஜியாண்டான்

48. ஜீயராண்டான்

49. ஈஸ்வராண்டான்

50. ஈயுண்ணிப்பிள்ளையாண்டான்

51. பெரியாண்டான்

52. சிறியாண்டான்

53. குறிஞ்சிபுரம்சிறியாண்டான்

54. அம்மங்கியாண்டான்

55. ஆளவந்தாராண்டான்

56. அருளாளப்பெருமாள்எம்பெருமானார்

57. தொண்டனூர் நம்பி

58. மருதூர் நம்பி

59. மழுவூர் நம்பி

60. திருக்குறுங்குடிநம்பி

61. குருவ நம்பி

62. முடும்பை நம்பி

63. வடுக நம்பி

64. வங்கிப்புரத்து நம்பி

65. ஸ்ரீபராங்குச நம்பி

66. அம்மங்கி அம்மாள்

67. பருத்திக் கொல்லை அம்மாள்

68. உக்கலம்மாள்

69. சொட்டையம்மாள்

70. முடும்பையம்மாள்

71. கொமாண்டூர் பிள்ளை

72. கொமாண்டூர் இளையவில்லி

73. கிடாம்பிப் பெருமாள்

74. ஆற்காட்டுப் பிள்ளான்

## சில வைணவப் பெரியோர்கள்

1. ஸ்ரீ M.A. லக்ஷ்மி தாத்தாச்சார்யர் சுவாமி
தலைவர் (சம்ஸ்க்ருத பவுண்டேஷன்)
278, ராஜ வீதி, மேல்கோட்டை, பாண்டவபுரம்
மாண்டியா மாவட்டம், கர்நாடகா - 571 431
தொடர்பு : 0821 - 4289674, 98801 56839

2. வீராபுரம் ஸ்ரீ சம்பத் தீக்ஷிதர் சுவாமி
23, C.V. ராஜகோபால் தெரு
சின்ன காஞ்சிபுரம் - 631 501
தொடர்பு : 93817 79777

3. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ A. கிருஷ்ணமாசார்யர் சுவாமி
214, கிழக்கு உத்தர வீதி
ஸ்ரீரங்கம், திருச்சி - 620 006
தொடர்பு : 98842 89887, 0431 - 2434398

4. ஸ்ரீ R. விளாஞ்சோலைப்பிள்ளை சுவாமி
தோப்புசாமி கார்டன்ஸ், பித்தளைப்பட்டி
பேகம்பூர், திண்டுக்கல் - 624 001
தொடர்பு : 92451 11947, 85084 25807

5. Dr. ஸ்ரீ M.A. வேங்கடக்ருஷ்ணன் சுவாமி
பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்
7, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005
தொடர்பு : 94440 33500, 044 - 2844 1653

6. வேளுக்குடி ஸ்ரீ V. கிருஷ்ணன் சுவாமி
6, பீமசேனா கார்டன்ஸ், மயிலாப்பூர், சென்னை - 600 004
தொடர்பு : 98410 43558, 044 - 2499 2728, 2499 3558

7. ஸ்ரீ M.V. அனந்தபத்மநாபாசார்யர் சுவாமி
16, 'ஸ்ரீ அஹோபிலம்', தேவநாதன் காலனி
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033
தொடர்பு : 93810 37722, 99620 11294, 044-2471 2284

8. தென்திருப்பேரை ஸ்ரீ அரவிந்தலோசனன் சுவாமி
10/46, தேரடி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005
தொடர்பு : 94452 50507

9. ஸ்ரீ K.B. தேவராஜன் சுவாமி
54, மகாலட்சுமி அபார்ட்மெண்ட்ஸ்
5, ராமசந்திரா தெரு, வெங்கடேசபுரம்
அம்பத்துார், சென்னை - 600 053
தொடர்பு: 94440 62433, 99404 55838

10. ஸ்ரீ A.V. அரங்காசாரியர் சுவாமி,
151, மேற்கு ரத வீதி
சிதம்பரம் (P.O), கடலூர் - 608 001
தொடர்பு: (04144) 220425. 94423 88820

11. முனைவர் ஸ்ரீ R. அரங்கராஜன் சுவாமி
28, அக்ரஹாரம் தெரு
பழங்காநத்தம், மதுரை - 625 003
'மதுரா', 1, ஜீவரத்தினம் நகர் மெயின் ரோடு,
அடையாறு, சென்னை - 600 020
தொடர்பு : 0452 - 2371124, 97914 57614

## ராமாநுஜர் வழி நடப்போம்

- கூச்சமும் தயக்கமும் இன்றித் திருமண் அணிந்துகொள்ளவேண்டும். திருமண்ணின் பெருமையை தன்னைச்சுற்றியுள்ள அனைவருக்கும் உணர்த்தி திருமண் மீது மதிப்பு உண்டாகும்படிச் செய்ய வேண்டும்.

- நாலாயிர திவ்யப்பிரபந்தத்தின் முக்கியப்பகுதிகளையாவது (திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, திருமாலை, இராமாநுச நூற்றந்தாதி முயன்று கற்க வேண்டும். ஆழ்வார், ஆசார்யார் அருள் வரலாறுகளைத் திரும்பத்திரும்பக் கேட்டும் சொல்லியும் இன்புற வேண்டும்.

- அடியார்களை எப்பொழுதும் போற்ற வேண்டும். இயன்ற பொழுதெல்லாம் அவர்களைத் தன்னிருப்பிடம் வரவழைத்து அமுது படைத்து மகிழ வேண்டும். கற்றறிந்த பெரியவர்களிடம் நேரம் கிடைக்கும்போதெல்லாம் நல்ல செய்திகளைக்கேட்டு மகிழ வேண்டும்.

- மாமிசம், முட்டையைப்போன்றே, பூண்டு, வெங்காயம், பட்டை-சோம்பு- மசாலா, முருங்கை, பீர்க்கை, சுரைக்காய், முள்ளங்கி போன்றவற்றைத்தவிர்க்க வேண்டும். கூடுமானவரையில் நாட்டுக்காய்களைத்தவிர மற்றவற்றைத்தவிர்க்க வேண்டும். விலையுணவு (ஹோட்டல்), திருமணம் போன்ற நிகழ்வுகளில் பரிமாறப்படும் உணவு போன்றவற்றையும் தள்ள வேண்டும். நெறிப்படி வாழும் நல்ல வைணவர்களின் உணவையே விரும்பியேற்க வேண்டும்.

- இயன்ற போதெல்லாம் திவ்யதேசங்களைத் தரிசித்து எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடிவர வேண்டும். திவ்யதேசங்கள் குறைகள் ஏதுமின்றி சிறப்புடன் விளங்க, அன்றாடம் உளமார வேண்டிக்கொள்ளவேண்டும். எம்பெருமான் மற்றும் ஆழ்வார் ஆசார்யர்களின் திருவிழாக்களை (உற்சவங்கள்) உகப்புடன் கொண்டாட வேண்டும்.

- ராமாநுஜர் நமக்கிட்ட கட்டளையின்படி ராமாநுஜரால் நியமிக்கப்பட்ட எழுபத்துநான்கு சிம்மாசனாதிபதிகளில் ஞானமும் ஆசாரமும் கருணையும் நிறைந்த யாராவது ஒருவரிடம் கட்டாயம் பஞ்ச சம்ஸ்காரம்(முத்ரா தாரணம்) செய்துகொள்ளவேண்டும். அல்லது தங்கள் முன்னோர்களின் ஆசார்யன் யாரேனும் இருப்பின் அவரிடமும் செய்துகொள்ளலாம்.

- இதைச் செய்துகொள்வதால் வரும் நன்மை, உயர்வு போன்றவற்றை ஆராய்வதைவிட, எம்பெருமானார் தாமே செய்துகொண்டமையாலும், அவரைச் சார்ந்தவர்களையும் பின்னவரையும் பஞ்சசம்ஸ்காரம் செய்துகொள்ளக் கட்டளையிட்டமையாலும், நாம் பஞ்சசம்ஸ்காரம் செய்துகொள்வது ஸ்ரீராமாநுஜரை உண்மையாகப் பின்பற்றுவது மற்றும் அவர் ஆணைக்குக் கீழ்ப்படிவது என்ற முறையில் தவிர்க்க இயலாத தலைசிறந்த கடமை ஆகும்.

- நமக்குத் தோள்களில் சங்கு சக்கரம் பொறித்து, நெற்றியில் திருமண் அணிவித்து, எம்பெருமானுக்கு அடியவன் என்ற அடையாளம் தோன்ற நற்பெயரிட்டு, திருமந்திரம் (நாராயண மந்திரம்) என்ற பெரும் அருட்செல்வத்தைத் தந்து, எம்பெருமானை அன்றாடம் போற்றித்தொழ (என இந்த பஞ்ச சம்ஸ்காரங்களையும் தந்து) வழிகாட்டிய ஆசார்யன் திருவடிகளிலும், ஆசார்யன் திருவடிப்பெருமைகளை நமக்கு உணர்த்தி உய்விக்கும் பெரியோர் (சதாசார்யார்) திருவடிகளிலும், நீங்காத மாறாத அன்பும் தொண்டுள்ளமும் இருக்கவேண்டும்.

- வைணவ நெறி "ஒருகற்புநெறி"யாகும். தமிழ் மரபின்படி ஒரு பெண், ஒரு கணவனை மணம் முடித்தபின் மற்ற எவரையும் உள்ளத்தாலும் நினையாததுபோல், எம்பெருமானை உணர்ந்து அவர் திருவடிகளைப்புகலடைந்தபின், ஆசை, மயக்கம், நெருக்கடி, அச்சம், பழக்கம், குலவழக்கம் போன்ற எந்தக்காரணங்களாலும் பிற தெய்வங்களை வழிபடவே கூடாது. நமக்கு வேண்டியதையெல்லாம் கொடுக்கும் ஆற்றலும் உரிமையும் கடமையும் எம்பெருமானுக்கே உள்ளது. எல்லாத்தெய்வங்களும், சூரிய ஒளியை வாங்கி சந்திரன் ஒளிர்வதுபோல், எம்பெருமான் அருளை வாங்கித்தான் தம் அடியவர்களுக்குத்தருகின்றார்கள் என்று வேதம் சொல்லுகிறது. எனவே கேட்காமலே தரும் அவனிடமும் கேட்டும் தராத பிறரிடமும் நாம் எதையும் கேட்க வேண்டியதேயில்லை. இந்நிலையை ஒரு கட்டாயமாகவோ கண்மூடித்தனமாகவோ ஏற்றுக்கொள்வதைவிட, நன்கு இக்கொள்கையின் சிறப்பைப்புரிந்துகொண்டு, வைணவ மரபைப்பின்பற்றலாம். ஏற்கனவே பின்பற்றிவருபவர்களும் இதை உணர்ந்தால் அவர்களின் அன்பும் உறுதியும் ஆழப்படும். எம்பெருமானின் பெருமைகளையும் அவனோடு நமக்குள்ள

உறவையும் எண்ணிச்சுவைக்கும் பொழுதே, அவன் ஒருவனையே நோக்கும் உணர்வும், மற்றவர்கள் எல்லோரிடத்திலும் நாட்டமின்மையும் இயல்பாகவே தோன்றும். இந்த முதிர்ச்சி ஏற்படாமல், கட்டாயம், ஆர்வக்கோளாறு, பிறரிடம் வெறுப்பு போன்றவற்றால் உண்டாகும் உணர்வு பெருமைக்குரியதோ நிலைத்திருப்பதோ அல்ல.

- நம் கொள்கைஉறுதி குலையாமல் அதேநேரத்தில் எல்லோரிடமும் அன்பு பாராட்டுபவனாய் எல்லோருக்கும் நன்மை நினைப்பவனாய், செய்பவனாய் வாழவேண்டும்.

- 'உடையவர் திருவடி'களை உள்ளன்போடு நினைக்க நினைக்க இந்தப்பண்புகள் தாமே ஊற்றெடுக்கும். இத்தகைய பண்பாளர் உள்ளத்தில் உடையவர் வீற்றிருந்து ஆட்சி செய்வார்.



